# வாடர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபிள்

## நிவாரணத்துடன், நோய்களை எதிர்க்கும் சக்தியையும் தருகிறது!

இருமலும், ஜலதோஷமும் உங்களைப் பலவீனப்படுத்தி, உங்கள் உடலில் நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைக்கும். இதனால் இதர நோய்களும் உங்களை எளிதில் பாதிக்கக்கூடும்.

பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டளித்து, உடலுக்கு நோய்த் தடுப்புச் சக்தியை அளிக்கக் கூடிய, ஊட்டமளிக்கும் பொருள்கள் அடங்கியது வாடர்பரீஸ் காம்பவுண்ட். அதிலுள்ள க்ரியோஸாட் மற்றும் க்வயகால், இருமலிலிருந்தும், ஜலதோஷத்திலிருந்தும் நிவாரணம் அளிக்கின்றன.




**சக்திக்கும் ஆரோக்கியத்திற்கும் வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்துங்கள்!**




வார்னர்-ஹிந்துஸ்தான் லிமிடெட்

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க மார்கழி 23 - ஜனவரி 7



கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.

வி.கே. /

**காதலி :** மச்சான் ! நீங்க என்னைக் கல்யாணம் கட்டிக்கோணும்னு கொஞ்ச காலம் காத்திருக்கணும்.

**டாக்ஸி ஓட்டி :** அதுக்கு 'வெயிட்டிங் சார்ஜ்' யார் தருவதாம் ?

வேறு வழி கிடையாது!

ஆங்கிலம்

மொழி முடிச்சு

பதவி

சீ, சீ இந்தப்
பழம் புளிக்கும்

காங்கிரஸ்காரர்களுக்குப் பதவி
ஆசை இல்லை என்று புதிய
த. நா. கா. க. தலைவர் கூறினார்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 23



# உற்சாகமூட்டும் உற்சவம்

ராஜாஜியின் தொண்ணூறுவது பிறந்த நாள் விழா ராஜாஜியின் யோசனையைப் பரிபூரணமாக ஆதரிக்கும் பெரு விழாவாகவே நிறைவேறியுள்ளது; மொழி மசோதா நாடாளு மன்றத்தில் நிறைவேறிவிட்டதே என்று கவலை கொண்டிருந்த மக்களுக்குப் புதிய உற்சாகமூட்டும் உற்சவமாக அமைந்துவிட்டது ராஜாஜியின் ஜயந்தி.

மசோதா நிறைவேறிய போதிலும் அதற்கு ராஷ்ட்ரபதி அங்கீகாரம் அளிக்குமுன் பிரதமர் அதை வாபஸ் பெறவேண்டும்; நாட்டில் கலவரமடங்கி அமைதியான சூழ்நிலை ஏற்பட்ட பிறகு நாட்டுப் பெரியோர்களைக் கூட்டி ஆட்சி மொழி சம்பந்தமாக மறு பரிசீலனை செய்ய வேண்டும் என்று சமீபத்தில் ராஜாஜி யோசனை கூறியிருக்கிறார் அல்லவா? அதையே டிசம்பர் 26ந் தேதி சென்னையில் ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணர் தலைமையில் நடந்த ராஜாஜி பிறந்த .தின விழாவில் பல பெரியோர்களும் வற்புறுத்தினார்கள்.

கட்சிப் பற்றற்ற வினோபா பாவே போன்ற ஒரு பெரியவரின் தலைமையில் நாட்டுப் பிரமுகர்களைக் கூட்டி ஆட்சி மொழி விஷயத்தை மறுபரிசீலனை செய்ய வேண்டும் என்று ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணர் கூறினார். மேலும்:

''தமிழர்களுக்கு அண்டையிலுள்ள தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிதான் இணைப்பு மொழியாக இருக்க முடியும் என்று திரு அண்ணாதுரை குறிப்பிட்டிருக்கிறார். இது தான் சரியான நிலை. அகில இந்தியாவுக்கும் ஓர் இணைப்புமொழி காலத்தின் போக்கில் இயல்பாக உருவாக்கப் படவேண்டும் என்று திரு அண்ணாதுரை கூறியிருப்பதை வரவேற்கிறேன்'' என்றார்.

ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக ஆட்சி மொழியாக இருந்து வந்திருக்கும் ஆங்கிலம் தொடர்ந்து நீடிக்கட்டும் என்றுதான் நாம் சொல்கிறோமேயன்றிப் புதியதாக ஒரு மொழியைக் கொண்டு வரும்படி சொல்லவில்லை. ஆனால் இதை ஹிந்தி வெறியர்கள், ''ஆங்கிலத் திணிப்பு'' என்று கூக்குரலிடுகிறார்கள். இப்படிக் கோஷித்த சில மாணவர்களை ஸ்ரீ ஜயப்பிரகாசர் அழைத்து, ''உங்கள் பொறி இயற் கல்லூரியில் எந்த பாஷையில் படிக்கிறீர்கள்? உங்கள் நீதி மன்றங்கள் எந்த பாஷையில் இயங்குகின்றன? ஆங்கிலத்திலே அல்லவா? இதை அண்ணாதுரையா திணித்தார்?'' என்று கேட்டாராம்.

வடநாட்டு ஹிந்தி வெறியர்களின் ஆங்கிலத் துவேஷம் அர்த்தமற்ற ரீதியில் இயங்கி வந்தாலும் தக்கபடி அவர்களுக்கு உண்மையை எடுத்துச் சொல்லும் வட இந்தியத் தலைவர்களும் இருக்கிறார்கள் என்ற நம்பிக்கையை ஸ்ரீ ஜயப்பிரகாசரின் பேச்சிலிருந்து பெற முடிந்தது.

திரு ம. பொ. சி. அவர்களும் இப் பிரச்னையை மறு பரிசீலனை செய்யவேண்டியதுதான் என்று கூறிவிட்டார்.

முடிவில் பேசிய முதலமைச்சர் திரு அண்ணாதுரை, இந்திய நாடு பிரிந்து போகாமல் இருப்பதற்காக ராஜாஜி எடுத்துக் கொள்ளும் முயற்சியே பிரதமருக்கு அவர் விடுத்துள்ள யோசனை என்றார். தேசிய மகாநாடு கூட்டுவதை ஆதரித்தார். இவ்விஷயத்தில் ராஜாஜியின் தலைமையை ஏற்று எந்தத் தியாகமும் செய்யத் தாம் தயார் என்று கூறி நம்மை உணர்ச்சிப் பெருக்கில் ஆழ்த்திவிட்டார் முதலமைச்சர். எனினும் 'தீவிர நடவடிக்கையில் இறங்கிவிடலாம்; ஆனால் அதனால் பயன் என்ன என்பதை ஆராய்ந்தே செயலில் ஈடுபட வேண்டும்' என்று கூறித் தமது நிதான புத்தியையும் வெளிப்படுத்தினார்.

மொழி மசோதா நாடாளு மன்றத்தில் நிறைவேறிவிட்டது என்பதால் ஓர் அநீதி அமலுக்கு வந்துவிடாது என்றும், நீதி கிட்டும் வரை போராடுவதற்குப் பேரறிஞர்கள் சித்தமாக இருக்கிறார்கள் என்றும் நிச்சயமாகிவிட்டது. இதிலிருந்து மக்கள் தெளிவும், தெம்பும், உற்சாகமும், உத்வேகமும் பெற வேண்டும்.

# தமிழ்த் தாய்க்குப் பரிசு!

பழந் தமிழ் இலக்கியங்களுக்காக ஊர் ஊராகச் சென்று, வீடு வீடாகத் தேடி, ஏடு ஏடாகச் சேகரித்து அவைகளைத் தமிழகத்தின் கருவூலமாகத் திகழும் வண்ணம் அச்சு வாகனம் ஏற்றி அயராது அருந்தொண்டாற்றிய மகாமகோபாத்தியாய டாக்டர் சாமிநாதய்யர் அவர்களைத் தமிழகம் என்றுமே மறவாது. ஐயரவர்கள் தமக்குப் பிறகும் அயராது தமிழ்த் தொண்டாற்றும் பொறுப்பை, பொறுக்கியெடுத்த சில மாணவர்களிடம் ஒப்படைத்து விட்டுப் போய் விட்டார். மேற்படி மாணவர்களுள் தலைசிறந்த திரு கி.வா. ஜகந்நாதன் அவர்களைத் தமிழ்கூறும் நல்லுலகம் நன்கு அறியும். அவர் அல்லும் பகலும் அனவரதமும் தம் எழுத்தாலும், சொற்பொழிவுகளினாலும், தமிழ் மொழிக்குத் தனிச் சிறப்பை அளித்து வருகிறார்.



சாகித்திய அகாதமி திரு கி. வா. ஜ. அவர்கள் எழுதிய ''வீரர் உலகம்'' என்னும் அரிய நூலைப் பாராட்டிப் பரிசளித்துக் கௌரவித்தது தமிழுக்கே அளிக்கப்பட்ட கௌரவமாகும்.

தமிழ் மக்களின் வீரம் பழங்காலத்தில் எவ்வாறு இருந்தது என்பதை உணர்த்தும் ''வீரர் உலகம்'' என்னும் இந்நூல் பழந்தமிழ் இலக்கியங்களான புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலையில் உள்ள மேற்கோள் பாடல்களை அடிப்படையாகக் கொண்டது. இந்நூலின் நோக்கம், பழந்தமிழரது வீரப் பண்பின் சிறப்பு, அதனால் விளைந்த வீரச் செயல்கள் ஆகியவற்றை விளக்கிக் கூறுவதுதான் என்கிறார் திரு கி. வா. ஜ. அந்நோக்கம் நன்கு நிறைவேறியிருக்கிறது என்பதை மேற்படி நூலைப் படித்தவர்கள் நிச்சயமாக ஒப்புக் கொள்ளுவார்கள்.

தமிழ் மொழியின் தனிப் பெருமையையும், தமிழ்ப் பெருமக்களின் வீரத்தையும் காவிய நடையில் எடுத்துரைக்கும் நூல் இது.

உலகத் தமிழர் மகாநாடு நடக்கவிருக்கும் இப்போது, தமிழக அரசு திறமையாகச் செயல்படும் இச் சமயத்தில் ஒரு தமிழ்ப் பெருமகனுக்குக் கிடைத்த சாகித்திய அகாதமியின் பரிசு தமிழ்த் தாய்க்கு அணிவிக்கப்பட்ட வீரக் கழலாகும்.

ஆசிரியர் திரு கி. வா. ஜ. அவர்களுக்கு நாமும் நம் வாசகர்கள் சார்பாக நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# என்ன சேதி?

## மித்ரபேதம்

புது தமிழகக் காங்கிரஸ் கட்சியின் தலைவர் திரு சி. சுப்பிரமணியம், அவர் வகிக்கும் பதவிக்கும், அவருடைய தகுதிக்கும் சற்றும் பொருத்தமில்லாத வார்த்தைகளை மொழிந்திருக்கிறார். மொழி விஷயமாக தி.மு.க. சொல்வதை எடுத்துக் கொண்டாலும் எடுத்துக் கொள்ளலாம்; ஆனால் ராஜாஜி சொல்வதை ஏற்க முடியாது என்று அவர் கூறியுள்ளார். மொழிப் பிரச்னையில் ராஜாஜியின் கருத்துக்கும் தமிழக அரசாங்கத்தின் கருத்துக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை என்பது முதலமைச்சரின் பேச்சுக்களிலிருந்து தெள்ளத் தெளியத் தெரிகிறது. அவ்வாறிருக்கையில் மித்ரபேதம் செய்கிற முறையில் திரு சி. எஸ். சரடு விடுகிறார். இது பலிக்காது!

தி. மு. க வின் மொழித் திட்டத்தை ஏற்றாலும் ஏற்கலாம் என்று கூறும் இவரே தி. மு. க. தலைவர்கள் மாணவர்களைக் கிளர்ச்சி செய்யும்படி தூண்டிவிட்டு விட்டு, பின்னால் அவர்களை அமைதியாக இருக்கும்படி வேண்டிக் கொண்டு ஒரு நாடகமே நடத்தியிருக்கிறார்களோ என்று சந்தேகப்படுவதாகவும் பேசியிருக்கிறார்.

கிளர்ச்சி நடக்கும் இடத்துக்கே சென்று மந்திரி கருணாநிதி அமைதி நிலைநாட்டியதைக் கண்டு தேசமே பாராட்டிப் போற்றுகிறது. இந்த நிலைமையில் அவர்களது அந்தரங்க சுத்தத்துக்கே மாசு கற்பிக்கும் வகையில் திரு சி. எஸ். பேசியிருப்பது வருந்தத்தக்கது.

## எழுத்தாளர் சங்கத் தலைவர்

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் 1968ம் ஆண்டின் தலைவராக நண்பர் திரு சோ. சிவபாதசுந்தரம் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்பதை அறிந்து மகிழ்கிறோம். இலங்கை வானொலியிலும், பி.பி.சி.யிலும் தமிழ்ப் பகுதியில் அரும்பணியாற்றிப் புகழ் ஈட்டியவர். மாணிக்கவாசகர் அடிச்சுவட்டிலே, கௌதம புத்தர் அடிச்சுவட்டிலே என இரண்டு அருமையான புத்தகங்கள் எழுதித் தமிழன்னைக்கு அணிகலன் அளித்திருக்கிறார். அவர் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதில் இலங்கைத் தமிழ் எழுத்தாளர்களும் தங்களுள் ஒருவராக இருந்த ஒருவர் இந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதில் நியாயமான மகிழ்ச்சி கொள்ளலாம்.

நல்ல இனிய பண்பாளரான திரு சிவபாதசுந்தரத்தின் தலைமையில், தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தொண்டு சிறக்கட்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

மொழிப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக நான் கூட்டச் சொல்லும் தேசிய மகாநாடு எண்ணிக்கையின் பலத்தைக் காட்டுவதற்காக அல்ல. இவ்வளவு பெரிய கூட்டம் சேர்ந்திருக்கிறது என்று தலையை எண்ணிப் பார்ப்பதற்கான கூட்டம் அல்ல நான் விரும்புவது. நாடு முழுவதிலுமிருந்து எல்லா வகுப்புக்களையும், தொழில்களையும் சேர்ந்த அறிவிற் சிறந்த ஒரு குழுவைப் பொறுக்கி எடுத்துத் தேசிய மகாநாடு நடத்த வேண்டும் என்பதே என் விருப்பம்.

அரசியல் சாஸனத்தில் உள்ள ஆட்சி மொழி பற்றிய பதினேழாவது பகுதியை ரத்து செய்ய வேண்டும் என்கிறேன். அரசாங்கக் காரியாலயங்களில் எந்த மொழி பயனாக வேண்டும் என்ற பிரச்னையை நிர்வாகக் குழுவுக்கும், தலைமை அதிகாரிகளுக்கும் விட்டுவிட வேண்டும். அவர்கள் எவ்விதமான சட்டத்தின் இறுக்கமான கட்டுப்பாடுமின்றி அவ்வப்போது சௌகரியத்துக்கேற்ப முடிவுகள் எடுத்து அதை அமல் நடத்துவார்கள். கடந்த நூறாண்டுகளுக்கு மேலாக இப்படித்தான் நடந்து வந்திருக்கிறது.

ஃஃஃ

ஹிந்தி அகில இந்தியத் தொடர்பு மொழியாக வேண்டும் என்று விரும்பும் என் சகோதரர்களுக்கு நான் மிகுந்த மரியாதையுடன் தெரிவிப்பது இதுவே. இரண்டு விஷயங்களில் ஒன்றை நாம் தேர்ந்தெடுத்தாக வேண்டும். ஒன்று, ஆங்கிலம் — ஹிந்தி என்ற இரண்டு மொழித் திட்டத்தைப் பின்பற்றி நாட்டை ஹிந்திப் பகுதி என்றும் ஆங்கிலப் பகுதி என்றும் இரு நிருவாகப் பிரிவுகளாகத் துண்டிப்பது. இரண்டாவது, சுதேசியப் பெருமிதத்தை அடக்கிக் கொண்டு ஆங்கிலத்தை அதிகாரபூர்வமான தொடர்பு மொழியாக ஒப்புக் கொள்வது. இவ்வாறு சுதேசியப் பெருமித உணர்வைத் தியாகம் செய்ததற்கு ஈடாக திறமை, நிருவாக முறிவின்மை, ஐக்கியம் என்ற மூன்றையும் பெறுவோம். இந்தியாவின் தொடர்பு மொழியும், அகில இந்திய அரசியல், வர்த்தக மொழியும் ஒன்றாகவே இருக்கும். இந்த அநுகூல அம்சங்களைப் பற்றி என்ன கருத்து கொண்டாலும் சரி, இந்தியாவை இரு தனிப்பட்ட நிருவாகப் பிரிவுகளாகப் பிளந்து, யூனியன் ஸர்வீஸ் உத்தியோகத்தைச் சிதைப்பது மகத்தான நஷ்டம் என்பதில் ஆட்சேபணைக்கிடமில்லை. இந்திய யூனியனின் புற அலங்காரங்கள் எப்படியாயினும், தர்ம ரீதியிலும் நிருவாகத்திலும் ஏற்படும் பிரிவினையால் இந்தியராகிய நம் ஒவ்வொருவருக்குமே மகத்தான நஷ்டம் விளையும் என்பதில் சந்தேகத்துக்கு இடமில்லை. இவ் விஷயமாக நாம் யோசித்துக் கொண்டிருக்கும் போதே காலம் நமக்கெல்லாம் எதிராகக் கருணையின்றி ஓடிக்கொண்டிருக்கிறது.

ஃஃஃ

சமூகக் கட்டுப்பாடு என்ற பெயரில் தேசத்தின் பாங்கு நிலையங்களில் சர்க்கார் தலையீட்டையும் கட்டுப்பாட்டையும் ஏற்படுத்துவதை ஆட்சேபித்து அந்த ஆட்சேபணைக்கான மறுக்கவொண்ணாத காரணங்களையும் காட்டி மராட்டா வர்த்தக சபை ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளது. பாங்கு நிர்வாகத்தின் மீது சாட்டப்படும் குற்றச்சாட்டுகளை, எதிர்வாதம் செய்ய முடியாத புள்ளி விவரங்களின் துணைகொண்டு திட்டவட்டமாக மறுத்துள்ளது.

1. தனியார் பாங்குகள் சிறிய தொழில்களின் நிதித் தேவைகளைப் பொருட்படுத்துவதில்லை.
2. தனியார் பாங்குகள் விவசாயக் கடன் தேவைகளைப் போதிய அளவுக்குப் பூர்த்தி செய்வதில்லை.
3. பாங்கு டைரக்டர்கள், கூட்டாளிகள் ஆகியோர் சம்பந்தப்பட்ட கம்பெனிகளுக்குத்தான் தனியார் பாங்குகள் பெரும்பாலும் அட்வான்ஸ் தருகின்றன.

என்ற மூன்று காரணங்கள்தாம் 'சமூகக் கட்டுப்பாட்டு'க்கு ஆதரவாகக் காட்டப்படுகின்றன. சிறிய தொழில்களில் சரியானபடி கணக்குகள் வைக்கப்படாததாலும், அவற்றில் ஈடுபட்டுள்ளோரின் கடன் தீர்க்கும் சக்தியை மதிப்பிட முடியாததாலும், அவற்றுக்கு உதவுவதில் பாங்குகளுக்குச் சிரமம் உள்ளது. பாங்குகள் என்பவை அவற்றில் பணம் போடுவோரின் தர்மகர்த்தாக்கள் என்பதை நினைவுகொள்ள வேண்டும். பணம் ஜாக்கிரதையாக இருக்கும், உரிய சமயத்தில் கிடைக்கும் என்ற நம்பிக்கை உள்ள இடத்தில்தான் பாங்குகள் துணிந்து செயலாற்ற முடியும். மக்களின் பணத்தை வைத்துக் கொண்டு, தகாத துணிச்சலுடன் பாங்குகள் செயல்பட வேண்டும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. நல்ல வியாபார முறைகளைப் பாங்குகளும் அநுசரிக்கத்தான் வேண்டும். தனியார் துறையில் இல்லாத ஸ்டேட் பாங்கு பலப்பல கிளைகளுடன் விரிந்து பரவியிருந்த போதிலும் சிறு தொழில்களுக்கு நிதி உதவி அளிப்பதில் விசேஷமாக ஏதும் செய்துவிடவில்லை. சிறு தொழில்களுக்குத் தரும் கடன்களுக்கு இன்ஷூரன்ஸாகச் சர்க்கார் கணிசமான உதவி தருமாயின், பாங்குகள் சிறு தொழில்களுக்குக் கடன் தருவதில் நிறைய முன்னேற்றம் காணமுற்படலாம். ஆனால் இதனால் கடன் திரும்ப வருமா வராதா என்ற பாரத்தை வரி கொடுப்போர் மீது தள்ளியதாக ஆகும்.

விவசாயக் கடன்களை நோக்குமிடத்து, பெரிய மலைத் தோட்டங்களுக்கும், விவசாயப் பொருட்களைப் பதம் செய்து சந்தைக்குக் கொண்டு வரும் தொழிலுக்கும் கடன் தருவது எளிது. இதை இப்போதே பாங்குகள் செய்து வருகின்றன. ஆனால் நாடு முழுவதிலும் பரவலாக உள்ள லட்சக்கணக்கான சிறிய விவசாயிகளுக்கு—இவர்களில் பெரும்பாலோர் தங்கள் வாழ்க்கைத் தேவையைத்தான் சிரமத்துடன் பூர்த்தி செய்து கொள்

னுர்கள் — கடன் வழங்குவது சிரம சாத்திய மான பிரச்னை.

சமூகத்தின் பொது நலனைப் பாராமல் பாங்கு நிர்வாகிகள் சம்பந்தப்பட்ட கம் பெனிகளுக்குத்தான் அட்வான்ஸ் தரப்படு கிறது என்ற குற்றச்சாட்டு பார்லிமென்ட் அங்கத்தினர்களிடையும், அவர்களுடைய இனத்தவரிடையும் எளிதில் செல்லுபடியாகி விடும். தருமத்தைப் பற்றிய குற்றச்சாட் டானபடியால் இதனை மராட்டா வர்த்தக சங்கம் விஸ்தாரமாக அலசியுள்ளது. அது கொடுத்துள்ள பட்டியலின்படி இந்தியாவி லுள்ள முக்கியமான தனியார் பாங்குகள் இருபதின் மொத்த அட்வான்ஸ் ரூ. 1478.93 லட்சம். இதில் டைரக்டர்கள் சம்பந்தப்பட்ட கம்பெனிகளுக்கு வழங்கியது ரூ. 150.23 லட் சம்தான். அதாவது மொத்தத்தில் 10 சத விகிதம்தான். மாறாக, ஸ்டேட் பாங்கின் அட்வான்ஸாகிய ரூ. 540.68 லட்சத்திலோ ரூ: 129.56 லட்சம் (அதாவது இருபத்து நான்கு சதவிகிதம்) அதன் டைரக்டர்கள் சம்பந்தப்பட்ட கம்பெனிகளுக்கு வழங்கப் பட்டுள்ளது. இதிலிருந்து நாம் செய்யக் கூடிய முடிவு, பாங்குகளின் மீது சமூகக் கட்டுப்பாடு செலுத்திய பின்பும் இந்தத் துஷ்பிரயோகம் நீடிக்கும் என்பதுதான். உண்மையில் அட்வான்ஸ் கொடுப்பது துஷ்பிரயோகம் அல்ல. ஏனெனில், ரிஸர்வ் பாங்கு அறிய வெளிப்பட வழங்கப்படு பவையே இந்த அட்வான்ஸ்கள். தரமான நிறுவனங்களுக்குத் தகுதியின் அடிப்படை யின் மீது அட்வான்ஸ் வழங்கப்படுகிறது.

1951-ல் பாங்குகளின் மொத்த டிபாஸிட் ரூ. 884 கோடி. இது 1966ல் ரூ. 3378 கோடியாக உயர்ந்துள்ளது. மக்களின் சேமிப்பைத் திரட்டுவதிலும், மக்களின் நம் பிக்கையைப் பெற்றிருப்பதிலும் பாங்குகள் பெற்றுள்ள முக்கியமான பங்கை இது குறிப்பிடுகிறது. மொத்த டிபாஸிட்டில் 55 சதவிகிதத்துக்கு மேல் தனிநபர் கணக்கில் வருபவை. இவ்வாறு தங்கள் நிதிநிலையைத் தனி நபர்கள் நம்பகமாக ஒப்படைக்கும் நிலைக் குக் குந்தகம் செய்வது பிராணுபத்தான தவறாகும். ராஜ்ய அரசாங்கங்களாலேயே தாங்கள் கொடுத்த கடனை யாரிடமிருந்து திரும்பப் பெற முடியவில்லையோ, அப்படிப் பட்டவர்களுக்குப் பாங்குகளின் டெபாஸிட் பணத்தை விநியோகிக்க வேண்டும் என்ற முரட்டுத் திட்டம் சரியல்ல. அட்வான்ஸுக்கு ஈடாக, கடன் வாங்கியவர்களின் நிலத்தைப்

---

ராஜாஜியின் 90-வது பிறந்ததின விழாவையொட்டிச் சென்ற 26ம் தேதி சென்னை பாலர் அரங்கில் சென்னை மக்கள் சார்பில் ஒரு மாபெரும் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீமதி எம். எஸ். துதிகீதம் பாட விழா தொடங்கியது. சென்னை மேயர் திரு ஹபிபுல்லா பேக் வரவேற்புரை நல்கினர். பலதுறைப் பிரமுகர்கள் கலந்து கொண்டார்கள். விழாவின் சில காட்சிகளை இங்கு காணலாம். (1) மேடையில் புது ஷெரீப் சித்ரா நாராயணசுவாமி, விழாத்



பாங்குகள் எடுத்துக்கொண்டு நிர்வகிக்கலாம் என்பது காரியசாத்தியமற்ற யோசனை.

ஃஃஃ

இந்தியாவைக் காக்க வேண்டுமாயின், தேச மக்களின் நடத்தை கீழ் நோக்கிச் செல்வதைத் தடுத்து நிறுத்த வேண்டும். மக்களுக்கு நன்னடத்தையை உண்டாக்குவதோடு, ஆபீஸிலும், பள்ளிகளிலும், வைத்திய சாலைகளிலும், ஆலைகளிலும், மற்றெங்கிலும் எவ்விதமான தொழில் செய்பவர்களும், உழைப்பிலிருந்து பின்வாங்காமலிருக்கச் செய்ய வேண்டும். வேலையைத் தட்டிக் கழிப்பது கண்டு அனைவரும் அருவருப்பு கொள்ள வேண்டும். உழைப்பு மனப்பாங்கு உண்டாக வேண்டும். தங்கள் வேலையைச் செவ்வனே செய்வதே, கடமையைச் செய்வதே தேச பக்தி எனக் கருத வேண்டும். எப்படியாவது பணம் பண்ணிவிட வேண்டும் என்ற ஆசையை விட்டு, உழைப்பதற்கு ஆசைகொண்டுநேர்மையுடன் நடப்பதே உண்மை ஜனநாயகப் பிரஜைகளின் மனத்தில் அங்கமாக வேண்டும். ஜனநாய வழியல்லாத கம்யூனிஸ்ட் நாடுகளில் கொடுங்கோன்மையான நிர்ப்பந்தத்தின் மூலம் வேலை வாங்கப் படுகிறது. ஆனால் சுதந்திர நாடுகளில் சுயேச்சையான உழைப்பு மனப்பான்மையின் வெளி அம்சமாகவே உழைப்பு அமைய வேண்டும். நம் மக்களுக்கு நன்னடத்தையும் உழைப்பில் பற்றும் உணர்த்தப்படவில்லையெனில் இது அறிவாளி சமூகத்தின் — அரசியல்வாதிகள் சமூகத்தின் — தவறேயாகும். இந்தியாவில் எல்லா வகுப்பினரிடையும் மத நம்பிக்கை அடிப்படையாக உள்ளது. அறிவாளிகள் மக்களைப் பயனுள்ளபடி ஊக்கினால், இன்று எப்படியாவது பணம் பண்ணவேண்டும் என்ற கருத்துச் சூழ்ந்துள்ள நம்நாடு திருந்தும். ஒவ்வொருவரின் வாழ்விலும், செயலிலும் உண்மையான தேசப் பற்றும் உண்மையான ஜனநாயக அறிவொளியும் பிறக்கும்.

இதுபற்றி ஸ்ரீ ஜயப்பிரகாசருடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தேன். அவர் எனக்கு ஒரு படி அப்பாலும் சென்றார். இச்சீர்திருத்தத்துக்கு மக்களைத் திருப்பும் ஒரு தலைவர் உதித்துவிட்டால், அதன்பின் சர்க்கார் இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்க அவசியமே இராது. மக்களின் உற்சாகச் செயலாற்றலாலேயே இன்றைய அரசியல் — பொருளாதார — தார்மிகத் திவாலா நிலையிலிருந்து விடுபடலாம்.

---

தலைவர் ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணர். (2) சென்னை முதன் மந்திரி திரு சி. என். அண்ணாதுரை. (3) ஜே. பி. ராஜாஜியை அவரது இல்லத்தில் சந்தித்துப் பேசினார். (4) மந்திரி திரு மு. கருணாநிதி (5) மேயர் ஹபிபுல்லா பேக் (6) திரு ம. பொ. சி., எம். எல். ஏ., (7) திரு ஏ. எல். முதலியார் (8) இலங்கை மக்கள் சார்பாக திரு தம்பையா தமது வணக்கங்களைத் தெரிவித்துக் கொண்டார். புது ஷெரீப் நன்றிகூறத் தேசிய கீதத்துடன் விழா இனிது முடிந்தது.









# லட்சுமிபுரம் இளைஞர் சங்கம்

சென்னை லட்சுமிபுரம் இளைஞர் சங்கத்திலிருந்து தங்கள் முப்பதாவது ஆண்டு நிறைவு விழாவுக்கு வருமாறு அழைப்பு வந்தது. அதைப் பார்த்ததும், 'இப்போது தானே இச் சங்கம் தொடங்கினாற்போலிருக்கிறது. அதற்குள் முப்பதாண்டுகள் ஆகிவிட்டனவா?' என்ற வியப்பும், இந்த முப்பதாண்டுகளில் இச்சங்கத்தார் எவ்வளவு தீரமாக எவ்வளவு நல்ல பணி செய்திருக்கிறார்கள் என்ற பாராட்டுணர்ச்சியும்தான் மனத்தில் எழுந்தன.

சங்கம் நடத்துவதில் என்ன தீரம் வேண்டிக் கிடக்கிறது என்று கேட்கலாம்.

பரம தரித்திரனுக்குத் தனகோடி என்று பெயர் வைத்தாற்போல் முதியோர்களே கூடும் இச்சங்கத்துக்கு இளைஞர் சங்கம் என்றும் பெயர் வாய்த்திருக்கிறது என்று பேசிக் கொள்வார்கள். அதற்கு ஏற்றாற்போல் இச்சங்கத்துக்குத் தலைவர் (இப்போது) தொண்ணூறுண்டையும் கடந்து விட்ட கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள்! கேட்பானேன் மக்களின் பரிகாசப் பேச்சுக்கு! இவற்றையொன்றும் பொருட்படுத்தாமல் சங்கம், எடுத்துக் கொண்ட குறிக்கோளுக்குப் பங்கமின்றி, ஜாம் ஜாம் என்று வெற்றிகரமாகப் பலப்பல கூட்டங்கள் நடத்தி, சென்னை வாழ்வில் முக்கியமான செல்வாக்குப் பெற்றுவிட்டது! இளைஞரை விட அதிகச் செயல் துடிப்பு உள்ள முதியவர்களின் சங்கமாதலால் 'இளைஞர் சங்கம்' என்ற பெயர் தனக்குப் பொருத்தமானதே என்று நிரூபித்து விடுகிறது இச்சங்கம். லட்சுமிபுரம் இளைஞர் சங்கத்துக்கு வரும் வயது முதிர்ந்த சபையோரிடம் ஒரு பெரிய பண்பைக் காண்கிறோம். எவ்வளவு மாறுபட்ட கருத்தாயினும் கேட்கத் தயாராக இருக்கிறார்கள்!

"நான் உன் கருத்தை ஒப்புக் கொள்ளாதவனாக இருக்கலாம். அந்த மாறுபட்ட கருத்தைப் பகிரங்கமாக வெளியிட உனக்கு இருக்கும் உரிமைக்காக என் மூச்சிருக்கும் வரை போராடுவேன்" என்றார் வால்டேர். அதை நடைமுறையில் அநுஷ்டித்துக் காட்டுபவர் இச்சங்கத்தார்.

நாட்டில் பொதுவாக ஒவ்வொரு சங்கமும் ஒவ்வொரு குறிக்கோளையும் கருத்தையும் பிரசாரம் செய்யும் பணியை மேற்கொள்ளும். ஆனால் இந்தச் சங்கத்துக்கு அந்த மாதிரி குறிக்கோள் கிடையாது. யார் எந்தக் கருத்தைத் தெரிவித்தாலும் தங்களுக்குப் பிடித்திருந்தாலும், பிடிக்காவிட்டாலும் கருத்துக் கொண்டவர் என்ன சொல்கிறார் என்பதை முழுதும் கேட்கத் தயாராயிருப்பவர்கள் இச்சங்கத்தார். அதனால் தான் இந்தச் சங்கத்தில் காங்கிரஸ்காரர்கள் பேசியிருக்கிறார்கள்; கம்யூனிஸ்டுகள் பேசியிருக்கிறார்கள்; இன்னும் பல அரசியல் கட்சித் தலைவர்களும் பேசியிருக்கிறார்கள்!

இவற்றையெல்லாம்விட இச்சங்கம் செய்த தனியான பாக்கியம் நமது அருமைத் தலைவர் ராஜாஜியின் பேரன்பையும் பெருமதிப்பையும் பெற்றிருப்பது!

எத்தனையோ சங்கத்தார் ராஜாஜியைப் பேச வரும்படி அழைப்பதும், ராஜாஜி மறுப்பதும் சகஜமாக இருந்து வருகையில், ராஜாஜி தாமாக உவந்து பேசச் செல்லும் இடம் இந்த லட்சுமிபுரம் இளைஞர் சங்கம்தான்.

அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவது பற்றி ஒரு புதுக் கருத்து ராஜாஜி மனத்தில் தோன்றினால் இச்சங்கத்துக்குத் தாமே பேச வருவதாகச் சொல்லி அனுப்பி விடுவார். அது போல் பி. வி. ஜி.யைப் பற்றி ராஜாஜி நிகழ்த்திய இயக்கம் இந்த மேடையிலிருந்து தான். மொழி விஷயமாகவும் எத்தனையோ முறை ராஜாஜி இங்கு பேசியிருக்கிறார்.

சென்ற முப்பதாண்டுகளில் காலஞ்சென்ற ராஷ்டிரபதி டாக்டர் ராஜேந்திரப் பிரசாதிலிருந்து, ராமசாமிப் பெரியார் ஈறாகப் பல்வேறு பிரமுகர்கள் பேசியிருக்கிறார்கள்.

டாக்டர் சியாமப் பிரசாத் முகர்ஜி, டாக்டர் மூஞ்சே, கே. எம். முன்ஷி, டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் இப்படி இங்கு பேசியவர்களைச் சொல்லிக் கொண்டு போனால் பட்டியலுக்கு முடிவே கிடையாது!

இச்சங்கம் இவ்வளவு வெற்றிகரமாக நடப்பதற்குக் காரணம் அதன் காரியதரிசிகளாகப் பணியாற்றும் ஸ்ரீ சந்தானமும், ஸ்ரீ ஸ்ரீநிவாச ராகவனும்தான். இவ்விரட்டையர்கள் சென்ற முப்பதாண்டுகளாகக் குன்றாத ஊக்கத்துடன் சென்னை மக்களின் அறிவுக்கும் சிந்தனைக்கும் இச்சங்கத்தின் வாயிலாக அருந்தொண்டாற்றி வருகிறார்கள். லட்சுமிபுரம் இளைஞர் சங்கம், வாழ்க பல்லாண்டு!

படம்: ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார், ஸ்ரீ சந்தானம், ஸ்ரீ சீனிவாசராகவன்




# செய்திப் படங்கள்



1. பம்பாய் பாரதிகலா மன்றத்தினர் டிசம்பர் 16, 17 தேதிகளில் பாரதி விழாவை விமரிசையாகக் கொண்டாடினர். அகில இந்திய ரேடியோ பிரதம தயாரிப்பாளர் திரு சோமு இவ் விழாவுக்குத் தலைமை வகித்தார். கணித மேதை சகுந்தலாதேவியின் கணித நிகழ்ச்சியும் ஸ்ரீமதி பத்மா நரசிம்மனின் இசை நிகழ்ச்சியும் நடந்தன.



2. ஒரிஸ்ஸாவில் சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளநிவாரண நிதிக்காகக் கட்டாக் தென்னிந்திய வர்த்தக சங்கத்தினர் 2251 ரூபாய் நன்கொடையை ஒரிஸ்ஸா முதன்மந்திரி ஸ்ரீ சிங்தேவிடம் வழங்கினார்கள்.





3. எண்ணூரில் பத்தாயிரம் கிர்லோஸ்கர் டீஸல் ஆயில் என்ஜின்கள் உற்பத்தியாகி யுள்ளன. இவற்றில் பத்தாயிரம் எண்ணிக்கை பூர்த்தி செய்த என்ஜினைச் சென்னை சர்க்காருக்குக் கிர்லோஸ்கர் நிறுவனத்தார் வழங்கினர். இவ்விழாவுக்குச் சென்னை முதன்மந்திரி திரு அண்ணாதுரை தலைமை வகித்தார்.



4. சென்னை நுங்கம்பாக்கம் ஏரியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீதேவி அங்காள பரமேசுவரி ஆலய அஷ்டபந்தன கும்பாபிஷேகத்தினையொட்டி நடைபெற்ற பொதுக் கூட்டம்.

# ராஜாஜி-பிரதமர் கடிதப் போக்குவரத்து

டிசம்பர் 10, 1967

அன்புள்ள இந்திராஜி,

நான் சுவாதீனம் எடுத்துக்கொள்வதைத் தாங்கள் மன்னிப்பீர்களென நம்புகிறேன். இத்துடன் நான் ஒரு தீர்மானத்தின் நகல் அனுப்பியுள்ளேன். நான் இந்த யோசனை தெரிவிப்பதன் நோக்கத்தை நீங்கள் மதித்தால், மக்கள் சபை விதிகளைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்து விட்டு, மக்கள் சபையில் இத் தீர்மானத்தை நிறைவேற்றுவது பற்றிச் சிந்திக்கலாம். மொழி மசோதாவினால் ஏற்பட்டுள்ள முட்டுக்கட்டை நிலையைக் கடக்க இது உதவுமென நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள
சி. ராஜகோபாலாச்சாரி

**தீர்மானத்தின் நகல்**

நாட்டின் அரசியல் நிலை ஸ்திரமடைந்து, பொருளாதாரம் முன்னேறும் வரையில் ஆட்சி மொழி பற்றிய அரசியல் சாஸனப் பகுதியின் அமல் நிறுத்திவைக்கப்பட வேண்டும் எனத் தீர்மானிக்கப்படுகிறது. நாட்டின் அரசியல் நிலை ஸ்திரமடைந்து, பொருளாதாரம் முன்னேறிய பின் அரசாங்கம் ஓர் அகில இந்திய சம்மேளனம் கூட்டி இப் பிரச்னையைப் பரிசீலிக்கும். இடைக் காலத்தில் எல்லாவிதப் பலாத்காரச் செயல்களையும் நிறுத்தும்படி எல்லாக் கட்சிகளையும் பார்லிமெண்ட் கேட்டுக் கொள்கிறது.

டிசம்பர் 14, 1967

அன்புள்ள ராஜாஜி,

டிசம்பர் 10ந் தேதியிட்ட தங்களது கடிதத்துக்கும் அதோடு தாங்கள் ஆட்சிமொழி மசோதா சம்பந்தமாக அன்புடன் அனுப்பியிருந்த தீர்மான நகலுக்கும் நன்றி.

இன்றைய மசோதாவைப் பொதுமக்கள் கருத்துக்காகச் சுற்றறிக்கையாக விடுவதோ அல்லது வேறெவ்விதத்திலேனும் அதன் பரிசீலனையை நிறுத்தி வைத்துப் பிரச்னையைத் தள்ளிப் போடுவதோ விரும்பத் தக்கதல்ல என்று என் சகாக்களும் நானும் கருதுகிறோம். நேற்று மக்கள் சபையில் இம்மசோதா மீது விவாதம் நடக்கையில் நான் குறுக்கிட்டு இவ்வாறு சொன்னதைத் தாங்கள் கவனித்திருக்கலாம். ஆட்சி மொழி குறித்த அரசியல் சாஸனப் பகுதியின் அமலையே சில காலத்துக்கு நிறுத்தி வைக்க வேண்டும் என்று தாங்கள் யோசனை சொல்கிறீர்கள். இதில் (மசோதாவை நிறுத்தி வைப்பதை விட) அதிக சிரமங்கள் உள்ளன.

மசோதாவைச் சட்டமாக்குவதற்குக் காலதாமதம் செய்யக் கூடிய எந்த நடவடிக்கையும் ஹிந்தி பேசாத ராஜ்ய மக்களின் மனத்தில் தீவிரமான சந்தேகங்களை உண்டாக்கும் என்று தென் இந்தியாவிலிருந்து வந்தவர்கள் எங்களிடம் திரும்பத் திரும்பக் கூறியுள்ளனர். என் தந்தையும் சாஸ்திரிஜியும் அளித்த வாக்குறுதிகளுக்குச் சட்டபூர்வமான உருவம் தருவதே இம்மசோதாவின் நோக்கம். இவ் வாக்குறுதிகள் முதலில் அளிக்கப்பட்டதிலிருந்து இப்போது பல்லாண்டுகள் ஆகிவிட்டன. உத்தேச நடவடிக்கை பற்றி ஏற்கனவே பெருமளவில் விவாதங்கள் நடைபெற்றுள்ளன. இது பெரும்பாலும் அமைதியான, உணர்ச்சி வசப்படாத சூழ்நிலையிலேயே நடந்ததெனினும், துரதிருஷ்ட வசமாக ஓரளவு கொதிப்பும் தீவிர உணர்ச்சியும் இப்பிரச்னையில் வெளிக்காட்டப் பட்டுள்ளன. மசோதாவைத் தள்ளிப் போடுவதால், 'அதி'யாகச் செல்பவர்களுக்கு ஊக்கம் தந்ததாகும். மறைமுகமாக இதுவே அவர்கள் சட்ட விரோதமான, பலாத்கார வழியில் தங்கள் கருத்துக்காகக் கிளர்ச்சி செய்வதற்கும் ஊக்கம் தரக் கூடும்.

ஹிந்தியரின் நலனுக்கும் ஹிந்தி பேசாதோரின் நலனுக்குமிடையே சமரசம் காண்பதைப் பிரதிபலிப்பதே மசோதாவின் சாரம். ஏராளமான திருத்தங்கள் கொண்டுவர விருப்பதாகத் தெரிவிக்கப் பட்டிருக்கிறது. சில முக்கியமான திருத்தங்களின் மீது விவாதமும் நடந்துள்ளது. பார்லிமெண்டில் இரு சபைகளிலுமுள்ள எதிர்க் கட்சிகளின் தலைவர்களுடன் கருத்துப் பரிவர்த்தனை செய்துகொள்ள எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததைத் தாங்கள் அறிந்திருக்கக் கூடும். மசோதாவை விரிவாக விவாதிக்கும் போது, நாட்டின் நாலு பகுதிகளைச் சேர்ந்த பார்லிமெண்ட் அங்கத்தினர்களின் கருத்துக்களுக்கிடையே மேலும் விட்டுக் கொடுத்துச் சமரசம் செய்து கொள்ள உதவுகிற சில திருத்தங்கள் ஏற்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. மசோதாவை எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவில் நிறைவேற்றி விடுவதில் கணிசமான அநுகூலம் உண்டு என்று நாங்கள் நம்புவதற்கு இவையே காரணங்களாகும்.

அன்பு நிறைந்த வணக்கங்கள்.
தங்கள் உண்மையுள்ள
இந்திரா காந்தி

டிசம்பர் 18, 1967

அன்புள்ள இந்திராஜி,

என் யோசனையைத் தாங்கள் ஏன் ஏற்கவில்லை என்பதையும், மசோதாவை நிறைவேற்றுவதிலேயே ஏன் முனைந்தீர்கள் என்பதையும் எனக்கு விளக்குவதற்காகத் தாங்கள் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டதற்காக நன்றி. என்னுடைய யோசனையைத் தாங்கள் எடுத்துக் கொண்டிருந்தால் ஸௌக்கியமாயிருக்கும் என நான் சொன்னால், நான் ஒரு

பிடிவாதக்காரன் என்று தாங்கள் முடிவு செய்யலாகாது.

அன்பு வணக்கங்கள். எப்போதுமே தங்களுக்கு நல்வாழ்த்துக்கள்.

தங்கள் உண்மையுள்ள
சி. ராஜகோபாலாச்சாரி

தமது கடிதத்தைப் பிரசுரிப்பதற்குப் பிரதமரை அநுமதி கேட்டு ராஜாஜி தந்தி கொடுத்திருந்தார். அதற்குப் பிரதமர் எழுதிய பதில்:

டிசம்பர் 15, 1967

அன்புள்ள ராஜாஜி,

தாங்கள் எனக்கு எழுதிய கடிதத்தைப் பிரசுரிப்பதற்கு என் அநுமதி கேட்டிருக்கிறீர்கள். தங்களுக்கு இதை நான் எப்படி மறுக்க இயலும்? எனினும் தாங்கள் எனது டிசம்பர் 14ந் தேதிக் கடிதத்துக்குச் சிறிது சிந்தனை அளிப்பீர்கள் என நம்புகிறேன். பெருமளவில் உணர்ச்சிகளைக் கிளப்பிவிட்டுள்ள பிரச்னையில் பகுத்தறிவு வழியையும் மிதமான போக்கையும் உண்டாக்கப் பாடுபடுபவர்களின் முயற்சிகளுக்கு ஆசிகூறுவீர்களெனவும் நம்புகிறேன். அரசியல் சாஸனத்தின் குறிப்பிட்ட பகுதியை நிறுத்தி வைப்பது எப்படி உதவி புரியும் என்பது எனக்கு வாஸ்தவத்தில் புரியவில்லை. இதனால் கிளர்ச்சிக்கு இன்னும் அதிக ஆயுள் தந்ததாகப் பொருளாகாதா? இப்படித்தான் நடக்கும் என்று நாங்கள் நினைக்கிறோம்.

தங்கள் கடிதத்தைப் பிரசுரிப்பதென முடிவு செய்தீர்களாயின், இந்தக் கடிதப் போக்குவரத்து முழுவதையுமே வெளியிடுவீர்களென நம்புகிறேன்.

அன்பு நிறைந்த வணக்கங்கள்.

தங்கள் உண்மையுள்ள
இந்திரா காந்தி

டிசம்பர் 20, 1967

அன்புள்ள இந்திராஜி,

தங்களது டிசம்பர் 15ந் தேதியிட்ட கடிதத்தைப் படித்து மெய்யாகவே நான் பெருமகிழ்ச்சி யடைந்தேன். (இன்று — 1967 டிசம்பர் 20ந் தேதி காலைதான் இக்கடிதம் கிடைத்தது.) தங்களோடு மீண்டும் வாதிப்பதற்கு இக்கடிதம் இன்னொரு வாய்ப்புத் தந்திருக்கிறது. அரசியல் சாஸனத்தின் (ஆட்சி மொழி) சம்பந்தப்பட்ட ஷரத்துக்களை நிறுத்தி வைப்பது உதவி புரியும் என்று நிச்சயமாக நம்புகிறேன்.

தாங்கள் சொல்வது போல் கிளர்ச்சி நீடிக்கக் கூடும். ஆனால் எப்படிப் பார்த்தாலும் கிளர்ச்சி தொடர்ந்து நடைபெறத்தான் செய்யும். நான் கூறிய வகையில் தாங்கள் ஒரு தீர்மானத்தைப் பிரேரித்து, அதைப் பார்லிமெண்ட் ஏற்குமாறு செய்தீர்களாயின், கிளர்ச்சிக்கு அதுவே ஓர் ஆரோக்கியமான திருப்பத்தைத் தரும் என்று திண்ணமாகக் கருதுகிறேன். என் கடிதத்தின் வாசகப்படி என் யோசனையைப் பூரணமாக ஏற்றுக் கொள்ளுங்கள். இந்தக் கடினமான பிரச்னையை நாம் திருப்திகரமாகத் தீர்ப்பதற்குத் தெய்வம் துணை செய்யும். ராஷ்டிரபதியின் அங்கீகாரத்தைப் பெறுமுன் சட்டத்தை வாபஸ் பெறுங்கள்.

தங்கள் உண்மையுள்ள
சி. ராஜகோபாலாச்சாரி

---

## காமகோடியின் கருணைமொழி



மனிதனாயிருந்தாலும், மிருகமாயிருந்தாலும், பறவையாக இருந்தாலும் உயிரினங்கள் யாவற்றின் மீதும் மனிதன் அன்பு செலுத்தப் பழக வேண்டும். அன்பில்லாத வாழ்க்கை வீண், வியர்த்தமே. எல்லோரிடத்தும் அன்பு செலுத்தும் தன்மை நம்மிடம் நிறைந்திருந்தால் துக்கத்துக்கே இடமில்லை. குழந்தைகளைப் பாருங்கள். அவர்களிடம் அன்பு பொங்கி வழிகிறது. ஆனால் வயது ஆக ஆக அவர்களுடைய அன்பு குறைய ஆரம்பிக்கிறது. அன்பு என்பது என்ன? ஒரு தாய் தன்னுடைய குழந்தையிடம் காட்டும் அன்பை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். பெற்றோரிடம் பற்றில்லாத பிள்ளைகளை உலகத்தில் பார்க்க முடியும். ஆனால் தன் குழந்தையிடம் பாசம் இல்லாத தாயைப் பார்க்கவே முடியாது. தாய் தன் குழந்தையிடம் காட்டும் அன்பைப் போலவே, நம்முடைய சுகத்தைவிட மற்றவர்களுடைய சுகம் தான் அதிக முக்கியமானது என்று நினைக்கத் தயாராக இருக்க வேண்டும்.

இந்த அன்பில் வேதனையும் இல்லாமலில்லை. ஏனெனில், ஆரம்பம் என்றிருந்தால் அதற்கு முடிவும் இருக்கவேண்டுமென்பது பொது விதி. நாம் மிகுந்த அன்பு வைத்துள்ள ஒருவர் மரணமடைந்து விட்டால், ரொம்ப மன வேதனை அடைகிறோம்; இதற்காக நாம் அன்பை வளர்க்கக் கூடாது என்று சொல்ல முடியுமா? ஆனால் அழிவில்லாத அன்பு ஒன்றிருக்கிறது. அதைப் பழகிக் கொண்டால் வேதனைக்கே இடமில்லை. அதுதான் கடவுளிடம் அன்பு செலுத்துவது. அழிவில்லாத கடவுளிடம் செலுத்தும் அன்புக்கு அழிவேது?

## ஷஷ்டிஅப்த பூர்த்தி



ஸ்ரீரங்கம் ஆண்கள் உயர்நிலைப் பள்ளி ஆசிரியர், திருவானைக் கோயில் **ஸ்ரீ வி. வெங்கட்ராம அய்யர்** அவர்களுக்கு ஷஷ்டி அப்த பூர்த்தி விழா சமீபத்தில் திருவானைக்கோயிலில் சிறப்பாக நடைபெற்றது.

## திருமணம்



திரு வி. என். ராமன் அவர்கள் குமாரி செல்வி **ராணி**க்கும், டெல்லி இண்டஸ்ட்ரியல் பைனான்ஸ் கார்ப்பொரேஷனின் ஓய்வுபெற்ற ஜெனரல் மானேஜர் திரு வி. எ. சுப்ரமணியம் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி **அனந்த்** அவர்களுக்கும் சமீபத்தில் பம்பாயில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !



NALIN

பாம்பை வசப்படுத்துவதிலும், மாயக் கயிறேறி ஜால வித்தை காட்டுவதிலும் இந்தியர்கள் தேர்ந்தவர்கள் என்ற தவறான எண்ணம் இன்று மறைந்து வருவது மகிழ்ச்சிக்குரியது. உண்மையை ஆராயுமிடத்து, ஆன்ம நெறியிலும், கலாச்சாரத்திலும், இலக்கியத்திலும் உயர்வெய்தியது போன்று, வாணிபத்திலும் இந்தியா, குறிப்பாகத் தமிழ்நாடு, சிறப்பெய்தியிருந்தது சரித்திரம் காட்டும் மறுக்கமுடியாத உண்மையாம். "திரைகடலோடியும் திரவியம் தேடிய" தமிழ்நாடு இன்றும் உயரிய பொருள்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறது. நாங்களும் மலேசியா, இலங்கை, ஈராக், கென்யா ஆகிய நாடுகளுக்கு ஒர்த்திங்டன் - ஸிம்ப்ஸன் பம்பு செட்டுகளை ஏற்றுமதி செய்து, நாட்டின் மதிப்பையும், பொருளாதாரத்தையும் உறுதிப்படுத்த ஆவன செய்கிறோம்.




**பெஸ்ட் & கம்பெனி**
**பிரைவேட் லிமிடெட்,**

13/15, நார்த் பீச் ரோடு, சென்னை-1.
தென்னிந்தியா
கேபிள்: "BEST" சென்னை.
டெலிபோன்: 29131 டெலக்ஸ்: 386

EP.8-86



# யாரோ இவர் யாரோ?

'சோ'

## அத்தியாயம் 23

ரவி தன் தந்தை சபாபதி வந்து விட்டதைப் பார்த்ததும், 'உடனே பட்டாணியன் விஷயத்தைப் பேசி முடிவு செய்துவிட்டு முத்துவுக்கு உதவப் போக வேண்டும்' என்று நினைத்து அவரிடம் நெருங்கி வந்தான்.

''அப்பா!'' என்றான் ரவி.

''என்னடா?'' என்றார் சபாபதி.

''அப்பா...வந்து...அப்பா...'' என்று தயங்கினான் ரவி. இன்ஸ்பெக்டர் இதைக் கேட்டுக்கொண்டே நெருங்கி வந்தார். ''ஸார்! நான் இந்த டிவிஷன் போலீஸ் இன்ஸ்பெக்டர். கேட்கிற கேள்விகளுக்கு 'கரெக்டாக'ப் பதில் சொல்லுங்க. உங்க மகன் இந்த ஆள்தானே?''

இன்ஸ்பெக்டரிடம் பொய் சொல்லக் கூடாது என்று நினைத்துச் சபாபதி ''ஆமாம்! இவன்தான் என் மகன்'' என்றார்.

''உங்களுக்கு வேறே யாரும் மகன் இல்லையே?''

''இல்லை. இவன் ஒரே மகன்தான்.''

''ஆல் ரைட்! ஓர் ஆளை அடிச்சுப் போட்டதற்காகவும், ஆள் மாறாட்டம் செய்து மோசடி செய்ததற்காகவும் நான் இவரைக் கைது செய்கிறேன்'' என்று கூறி ரவியின் கையைப் பிடித்தார் இன்ஸ்பெக்டர். முத்து சபாபதியின் மகன் என்று நினைத்திருந்த ராஜரத்தினம் சபாபதியின் மகனே திருடன் என்று இன்ஸ்பெக்டரிடம் கூறிவிட்டுப் போய்விட, இப்போது சபாபதி தமது மகன் என்று ரவியைக் காட்ட, இன்ஸ்பெக்டர் ரவிதான் ராஜரத்தினத்தின் வீட்டில் ஆள் மாறாட்டம் செய்து நகை திருடத் திட்டமிட்ட திருடன் என்று நினைத்து அவனைக் கைது செய்தார்.

இதையெல்லாம் சற்றுத் தூரத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்த சின்னதுரையின் மனம் கொதித்தது.—''ரவி சபாபதியின் மகனா? தம்மை எப்படியெல்லாம் ஏமாற்றி விட்டார்கள்!'' என்று எண்ணிப் பொருமினார்.

சபாபதி திக்பிரமை பிடித்து நிற்க, ரவியைப் பேசக்கூட விடாமல் இன்ஸ்பெக்டர் தமது ஜீப்பில் ஏற்றி அழைத்துச் சென்றுவிட்டார்.

சபாபதி சின்னதுரையை நெருங்கி, ''சின்னதுரை! எதையும் மனசுலே வெச்சுக்காதே. உனக்கு இந்த ஊரிலே செல்வாக்கு இருக்குது. என் மகனை விடுவிச்சுத் தாப்பா!'' என்று காலில் விழாத குறையாகக் கேட்டார்.

''முடியாது! என்னை முட்டாள்னு நினைச்சு அப்பனும் பிள்ளையுமாகச் சேர்ந்து ஏமாத்தினீங்க இல்லே...மோசடி பண்ணி உன் பையன் மாட்டிக்கிட்டான். நல்லா வேணும். ஹூம் மோசடி வழக்கு! அவமானம்! உன் பரம்பரைப் புத்தி அவ்வளவுதானே?'' என்று கொக்கரித்தார் சின்னதுரை.

ரவியின் விடுதலைக்குச் சின்னதுரையிடம் எந்த விதமான உதவியையும் எதிர்பார்க்க முடியாது என்று சபாபதி உணர்ந்து செய்வதறியாமல் திகைத்து நின்றார்.

எதிராஜ் துரத்த முத்து ஓடிக் கொண்டிருந்தான். அப்போது அவன் மனமார அசோக்குக்கு நன்றி செலுத்திக் கொண்டிருந்தான். 'அசோக்! நீ என்னை விடாமல் துரத்தித் துரத்தி அடித்ததால்தானே, நான் இவ்வளவு நன்றாக ஓடப் பழகிக் கொண்டேன். ஒரு வேளை ராஜரத்தினத்தின் நகையை நான் காப்பாற்ற வேண்டியிருக்கும் என்று முன்கூட்டியே அறிந்துதான் எனக்கு ஓட்டப் பயிற்சி அளித்தாயா? உனக்குத்தான் எவ்வளவு எஜமான விசுவாசம்' என்று அசோக்கை மனத்தில் பாராட்டியவாறே முத்து ஓடிக் கொண்டிருந்தான். இரவு மணி பன்னிரண்டரைக்கு மேல் இருக்கும்.

ஓடிக் கொண்டேயிருந்த முத்து திடீரென்று ஒரு பள்ளத்தில் விழுந்தான். 'அவனுக்கென்று ஒரு பள்ளம் திடீரென்று வந்ததா?' என்ற கேள்விக்கு இடமில்லை. சென்னையில் பள்ளமில்லாத தெருக்கள் மிகச் சொற்பமே அல்லவா? பள்ளத்தில் முத்து விழுந்ததைப் பின்னால் வந்த எதிராஜ் கவனிக்கவில்லை. அதனால், பள்ளத்தைத் தாண்டி எதிராஜ் மேலே சென்றான். தெரு முனைவரையில் சென்ற எதிராஜ், முத்துவை எங்கும் காணாமல் திகைத்து நின்றான்.

பள்ளத்தில் விழுந்த முத்துவுக்கு ஏதோ ஒரு மெத்தை மேல் விழுந்தது போல் இருந்தது.

''யாரது?'' என்ற குரல் கேட்ட போதுதான் யாரோ ஒரு மனிதன்மேல் விழுந்தோம் என்று முத்து உணர்ந்தான். மீண்டும் அக்குரல் கேட்டது.

''யாரது?'' இப்போது முத்துவுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. 'இது ரவியின் குரலல்லவா?'

''ரவி நீயா? நான்தான் முத்து!''

''அடப்பாவி! நீ எங்கேடா இங்கே வந்தே?'' என்றான் ரவி.

''நீ எப்படி வந்தே? சிநேகிதன்னு நீதான் சிநேகிதன். ஆபத்து சமயத்திலே வந்து உதவி செய்ய வந்திருக்கியே....!''

''டேய், முத்து! நான் போலீஸிலே மாட்டிக்கிட்டேன்.''

''இத்தனை நாட்கள் நீ தப்பிச்சது தான் ஆச்சரியம்!''



''அவங்க என்னைத் துரத்தினுங்க. நான் இங்கே ஒளிஞ்சுக்கிட்டேன்'' என்று தன்னுடைய பள்ள விஜயத்தின் காரணத்தை விளக்கினான்.

முத்துவும், எதிராஜ் நகையைத் திருட மாடி மீது குதித்ததிலிருந்து தான் பள்ளத்தில் விழுந்தது வரை நடந்த விவரங்களைக் கூறினான்.

''இப்ப என்ன செய்யலாம்?'' என்றான் முத்து.

''நீன்னு நினைச்சுத்தான் என்னைப் போலீஸ் துரத்துது. இப்பவே ரெண்டு பேரும் நகையை எடுத்துக்கிட்டு ராஜரத்தினம் வீட்டுக்குப் போகலாம், வா.''

''போலி டாக்டரா வந்ததுக்காக என்னைப் போலீஸ் பிடிச்சுடுமே?''

''ராஜரத்தினம்கிட்டேயே சொல்லிக் கேஸ் இல்லாமல் பார்த்துக்கலாம். அவர் பிராது கொடுக்காம இருந்துட்டா ஒண்ணும் வம்பு இல்லே.''

''இப்ப நான் வெளியிலே வர முடியாது. என்னை எதிராஜ் பார்த்தால் தொலைச்சுப்பிடுவான்.''

''சரி, நீ இங்கேயே கொஞ்ச நேரம் 'வெயிட்' பண்ணி, அப்புறம் வா. நான் நகையை எடுத்துக்கிட்டுப் போறேன்'' என்றான் ரவி.

''எனக்குத் தனியா பொழுது போகாதே? என்ன செய்யறது?'' என்றான் முத்து.

''வானத்திலே இருக்கிற நட்சத்திரங்களையெல்லாம் எண்ணிக்கிட்டே இரு.''

''அது முடிஞ்சுட்டா? அப்புறம் என்ன செய்யறது? அதைவிட ரொம்ப நேரம் யோசிக்கிற விஷயமா ஏதாவது சொல்லு. அதைப் பத்தி யோசிச்சுக்கிட்டிருக்கேன்!''

''சரி! நல்ல தெருவிலே எல்லாம், இந்த மாதிரி பள்ளத்தை எல்லாம் எதுக்காக வெட்டி விட்டுப்பிடறாங்கன்னு யோசிச்சுப் பாரு! விடியற்காலை வரையிலும் அந்த யோசனைக்கே நேரம் சரியாக இருக்கும்!'' என்று கூறி ரவி பள்ளத்தை விட்டு வெளியேறினான்.

தெரு முனையில் முத்துவை எதிர்பார்த்து நின்றிருந்த எதிராஜ் ரவி அவனைக் கடந்து சென்ற போது ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு நின்று கொண்டிருந்தான். அவன் தன்னைப் பற்றிச் சற்றும் கவலைப் படாததைக் கண்ட



ரவி, 'முத்துவுக்கு இருக்கும் மதிப்பு நமக்கில்லையே' என்ற மன வருத்தத்தோடு ராஜரத்தினம் வீட்டை நோக்கி வேகமாக நடந்தான்.

போகும் வழியில் ரவி சனீசுவரன் கோவிலுக்குச் சென்று சனீசுவர பகவானைப் பிரார்த்தித்தான்.

''சனீசுவரா! இனியாவது ஒரு விக்னமும் இல்லாமல் என் காரியங்களை நிறைவேற்று. விக்னங்களை அகற்று'' என்று பக்தியோடு கூறி நின்றான். 'விக்னம்' என்ற வார்த்தையைக் கேட்டவுடன் சனீசுவர பகவானுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''ஆஹா ! நாம் விக்னேசுவரரை மறந்ததால் அல்லவா, நமது பக்தனுக்கு இவ்வளவு தொல்லைகள்'' என்று உணர்ந்தார். உடனே விநாயகரிடம் ஓடி, ''என்னை மன்னித்துவிடு. என் பக்தனுக்கு உதவு'' என்று வேண்டி நின்றார் சனீசுவரன். ''என் பக்தன் வெற்றி பெற்றால் பூலோகத்தில் என் பெயரில் ஒரு பிள்ளை வாழ்வான்... தயவுசெய்து கருணை புரி, விக்னேசுவரா !'' என்று கெஞ்சினார். மன்னிப்புக் கேட்ட சனீசுவரனை மன்னித்து விக்னேசுவரர் புன்னகை புரிந்தார். ''கவலைப்படாதே, சனீசுவரா!'' என்று விக்னேசுவரர் தைரியம் கூற, சனீசுவர பகவான் மன மகிழ்ச்சியோடு திரும்பினார்.

சின்னதுரை வீட்டில் ரவியை, ஜாமீனில் விடுவிக்க ஏற்பாடு செய்யத் தன் தந்தை மறுத்துவிட்டுச் சென்றதைச் சித்ரா பார்த்துக்கொண்டிருந்தாள். ரவிதான் அவர் மகன் என்பதைத் தான் முன்னமே அவர் கடிதத்திலிருந்து அறிந்ததைச் சபாபதியிடம் கூறிவிட்டு, சித்ரா, அவரைச் சமாதானப்படுத்தினாள். ''நீங்க எங்கப்பா சொன்னதைப் பத்திக் கவலைப்படாதீங்க. எங்கப்பா சிநேகிதர் ராஜரத்தினம் பெரிய நகை வியாபாரி. அவருக்கும் நல்ல செல்வாக்கு இருக்குது. இப்பவே அவர் வீட்டுக்குப் போகலாம். அவர் வழியா ரவியை ஜாமீனிலே அழைச்சுக்கிட்டு வந்துடலாம்'' என்று சபாபதியிடம் கூறி, தன் தாயார் பார்வதியம்மாளிடமும் விஷயத்தைக் கூறிவிட்டு, சபாபதியோடு ராஜரத்தினம் வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றாள். அவர்களோடு தணிகாசலமும் சென்றார்.

சிறிது நேரம் கழித்துச் சின்னதுரை தம் மனைவியிடம் பெருமையாக, ''பார்த்தியா! உன் அண்ணனை ! அயோக்கியப் பய! இப்ப வந்து காலைப் பிடிக்கிறான். ஜாமீனுக்காகக் கெஞ்சினான். முடியாதுன்னுட்டேனே.... ?'' என்று கூறி ஆனந்தப்பட்டார்.

பார்வதியம்மாளுக்குக் கோபம் பீறிட்டு வந்தது. ''நீங்க முடியாதுன்னு சொன்னா என்ன? எங்கண்ணனுக்கு உதவி செய்யறதுக்காகச் சித்ரா அவரைக் கூட்டிக்கிட்டு ராஜரத்தினம் வீட்டுக்குப் போயிருக்கிறாள். அவர் கையிலே சொல்லி ரவியை ஜாமீனிலே அழைச்சுக்கிட்டு வரப் போறாங்க!''

''அவ்வளவு திமிரா சித்ராவுக்கு? இப்பவே போய் ராஜரத்தினம் கையிலே சொல்லி ஜாமீனுக்கு ஏற்பாடு செய்ய வேண்டாம்னு சொல்லப் போறேன்'' என்று கத்திவிட்டுச் சின்னதுரை பார்வதியம்மாளையும் பலவந்தமாக இழுத்துக் கொண்டு ராஜரத்தினம் வீட்டுக்குப் புறப்பட்டார்.

ராஜரத்தினம் வீட்டுக்குச் சித்ராவும் சபாபதியும் போய்ச் சேரும்போது, ராஜரத்தினம் நகை பறி போயிருப்பதை அறிந்து கவலையோடு இருந்தார். சித்ரா அவரிடம் தன் குடும்ப விஷயங்களைச் சுருக்கமாகக் கூறி, போலீஸார் ரவியை அழைத்துப் போய்விட்ட விவரத்தையும் கூறினாள். ராஜரத்தினத்துக்கு, முத்து கைதாவதற்குப் பதிலாக, தாம் செய்த குழப்பத்தினால் வேறு ஒருவன் கைதாகி விட்டான் என்று தெரிந்தது. ரவியை விடுதலை செய்யத் தாம் ஏற்பாடு செய்வதாகக் கூறினார்.

அப்போது சின்னதுரை அங்கு வந்து ராஜரத்தினத்திடம், ரவியை விடுதலை செய்ய உதவக் கூடாது என்று தடுக்க, தந்தைக்கும் மகளுக்கும் பெரிய வாக்குவாதம் நடந்தது.

இந்தச் சமயத்தில் ரவியை அடிக்கடி தொந்தரவு செய்து கொண்டிருந்த பட்டாணியன் அங்கு வந்து சேர்ந்தான்.

''சின்னதுரே ஸாப்! நிம்பள் வண்டி ரோட் மேலே பார்த்தான். அதான் உள்ளே வந்தான். நம்பள் பணம் தராமே எத்னி நாள் ஆவுது! எப்போ தரான் நிம்பள்?'' என்று சின்னதுரையைப் பார்த்துப் பட்டாணியன் கேட்கவும் சின்னதுரையின் முகம் வெளிறியது.

''இவர் உங்கிட்டே கடன் வாங்கியிருக்காரா ?'' என்று பார்வதியம்மாள் பதற்றத்தோடு கேட்டாள்.

''ஐம்பதாயிரம் ரூப்பா '' என்றான் பட்டாணியன்.

சின்னதுரை பேசத் தொடங்கினார். ''ஆமாம், பார்வதி ! ரேஸுக்குப் போனதினாலே ஏகப்பட்ட கடன் வந்திரிச்சு. அதைத் திருப்பிக் குடுக்கக் கையிலே பணமில்லே. ஒரு குருட்டு அதிர்ஷ்டம் இருந்தால் ரேஸிலேயே

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.




வெள்ளை டெட்

சலவையின் மேன்மை, வெண்மையுடன் தூய்மை

வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்

பணம் கிடைக்காதா என்றுதான் இன்னமும் ரேஸுக்குப் போய்க்கிட்டிருக்கிறேன். ரவி வந்ததுலேர்ந்து, கொஞ்சம் ரேஸிலே பணம் வர ஆரம்பிச்சுது. ஆனா பாவிப் பய சபாபதி மகன்னு தெரிஞ்சிருந்தா அன்னிக்கே விட்டை விட்டுத் துரத்தியிருப்பேன். இந்தக் கடன் விவகாரம் வெளியிலே தெரிஞ்சா அசிங்கமாயிடும்னுதான் உங்ககிட்டேகூடச் சொல்லாம மறைச்சுட்டேன். இப்ப எல்லாருக்கும் தெரிஞ்சிருச்சு'' என்று கூறித் தலை குனிந்து நின்றார்.

சின்னதுரைக்கு இப்படி ஒரு நிலையா என்று அனைவரும் பரிதாபப்பட்டு நிற்கும்போது ரவி நகையோடு ஓடி வந்தான்.

அவன் கையில் நகைப் பெட்டியைப் பார்த்தவுடன் ராஜரத்தினம், ''நகை! நகை! நெக்லேஸ்'' என்று கூக்குரலிட்டார்.

''கொஞ்சம் இருங்க ஸார்!'' என்று அவரை அடக்கினான் ரவி.

பட்டாணியன் ரவியிடம் வந்தான். ''என்னா ஸார், விட்டுப் பத்திரம் கைமேல் இருக்கிறான். உங்கப்பன் கையிலே கையெழுத்து வாங்கித் தரான்!''

''என்னடா அது, பத்திரம்?'' என்றார் சபாபதி.

''பணம் தர வேண்டாம்? அதுக்குப் பதில் வீடு தர்றாரு....'' என்றான் பட்டாணியன்.

ரவியையும், சபாபதியையும் புண்படுத்தக் கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிடச் சின்னதுரைக்கு மனமில்லை.

''பார்த்தியா, பார்வதி உங்க குடும்ப லட்சணம் எப்படி இருக்குது பாரு. இந்தப் பய மெட்ராஸுக்கு வந்து நாலு மாசம் ஆகலே. அதுக்குள்ளே விட்டை எழுதிக் கொடுக்கிற அளவுக்குக் கடன். அவ்வளவு என்ன செலவு? எனக்காவது ரேஸிலே வந்த கடன். இவன் என்னவெல்லாம் அயோக்கியத்தனம் செய்தானோ? இவங்க குடும்பமே அயோக்கியத்தனமான குடும்பந்தானே!'' என்று எக்காளமிட்டார். நம்முடைய கஷ்டத்திலும் பிறர் கஷ்டத்தைப் பார்க்கும்போது மனிதனுக்கு ஒரு மனத் திருப்தி ஏற்படுகிறது.

சபாபதி ரவியை வெறுப்போடு பார்த்தார். ''ஏன்டா? இப்படி நம்ப குடும்ப கௌரவத்தையே குலைக்கலாம்னு திட்டம் போட்டுத்தான் மெட்ராஸுக்கு வந்தியா? இதைவிட நீ ஜெயிலுக்கே போயிருக்கலாம்'' என்றார் சபாபதி.

''கவலைப்படாதே. நீ பத்திரத்துலே கையெழுத்துப் போடாட்டி ரவி பட்ட கடனுக்காக, பத்தான் அவனை ஜெயிலிலேதான் தள்ளுவான்'' என்று கூறி மகிழ்ந்தார் சின்னதுரை.

பட்டாணியன் சின்ன துரையைப் பார்த்தான். ''ரவியை ஜெயில்லே நம்பள் தள்றான் இல்லே ஸாப். பத்திரம் மேலே கையெழுத்து இல்லே சொன்னா, நிம்பள் போறான் ஜெயில் உள்ளே. நிம்பள் கடனுக்குத்தான் ரவி வீடு கொடுக்கிறேன்னு சொன்னாங்க'' என்றான் பட்டாணியன்.

---

## அலாரம் அடிக்காத கடிகாரம்!



படிக்கும் பிள்ளைகள் உள்ள வீட்டில் பரீட்சை காலத்தில் குடும்பமே அலாரம் சத்தத்தைக் கேட்டு விழித்துக் கொள்ளும்; எழுந்திருக்க வேண்டியவரைத் தவிர. இனி அந்தக் கவலை இல்லை. 'அட்லாண்டா'வைச் சேர்ந்த 'ஸாம்' என்பவர் ஒரு புது விதமான அலாரம் கடிகாரத்தைக் கண்டு பிடித்திருக்கிறார். இதைக் கையில் கட்டிக் கொண்டால், அந்தக் குறித்த நேரம் வந்ததும் கை சூடேறும். அந்தச் சூட்டில் தூங்குபவர் விழித்துக் கொள்ளுவார்.

மு. இரவீந்திரன்
ஆதாரம்: 'பேஜண்ட்'

---

''ஆமாம் அப்பா, சின்னதுரை வீட்டுக்கு நான் போன முதல் நாள் இந்தப் பட்டாணியன் வெளியிலே வந்துகிட்டிருந்தான். அப்பதான் சின்ன துரைக்கு இவன்கிட்டே எழுபதினாயிரம் ரூபாய் கடன் இருக்குதுன்னு தெரிஞ்சுக்கிட்டேன். அதைக் கேட்க என் மனசு பொறுக்கலே. அந்தப் பணத்தை நான் கொடுக்கிறதாகச் சொன்னேன். அதுக்காகத்தான் நம்ம விட்டையும் பத்திரம் எழுதி என்

கையெழுத்துப் போட்டேன். நீங்களும் ஒத்துப்பீங்கன்ற நம்பிக்கையிலே உங்க கையெழுத்தையும் வாங்கித் தரதாச் சொன்னேன்'' என்று கூறினான் ரவி.

''அரே சின்னதுரே! இப்போ புர்யுதா? உனக்கு வெக்கம் இல்லே! உன்கு ரவி ஸாப் உதவி செய்யறுங்கோ! நிம்பள் அவர்கு திட்றுங்கோ. நிம்பள் மன்ஸன் இல்லே'' என்று தன் அபிப்பிராயத்தை வெளியிட்டான் பட்டாணியன்.

''பேசாம இருப்பா'' என்று சபாபதி அவனை அடக்கிவிட்டு ரவியிடம், ''டேய் நீ செஞ்சது ரொம்ப சரி. நம்ப குடும்பத்துலே ஒருத்தருக்குக் கஷ்டமோ, அவமானமோ வந்தா அது நமக்கு வந்த மாதிரி. பத்திரத்தை எடு, கையெழுத்தைப் போடறேன்'' என்று பத்திரத்தை வாங்கிப் பக்கம், பக்கமாகக் கையெழுத்துப் போட ஆரம்பித்தார்.

பட்டாணியனுக்கு ஒரு சிறு குழப்பம் எழுந்தது. 'ரவியின் தகப்பனார் யார்? தணிகாசலமா, சபாபதியா?' என்பதே அது. சபாபதி பத்திரத்தில் கையெழுத்திட்டுக் கொண்டிருந்தபோது, ரவி தன் குடும்ப உறவு முறைகளை அவனுக்கு விளக்கினான்.

பட்டாணியனிடம் கையெழுத்திட்டுப் பத்திரத்தைக் கொடுத்துச் சபாபதி ''நாளைக்கே ரிஜிஸ்டர் பண்ணிடலாம்'' என்று கூறி அனுப்பினார்.

போகும்போது பட்டாணியன் சின்னதுரையிடம், ''உன்கு ரோஸம் இல்லே? ரவி ஸாப், அவர் அப்பா இரண்டு பேரும் பெரிய மன்ஸன். நீ ரொம்ப சின்ன மன்ஸன்...'' என்று தனது தீர்ப்பைக் கூறிவிட்டு வெளியேறினான்.

சின்னதுரை வாயடைத்து நின்றார். அங்கு நின்றவர்கள் காலடியில் தாம் விழுந்து கிடப்பதாக நினைத்து மனம் நொந்து நின்றார்.

அப்போது எதிராஜுவும் முத்துவும் அங்குவந்துசேர்ந்தார்கள். எதிராஜுக்கு ரவியிடம் நகை இருப்பதும், அவன் நகையோடு ராஜரத்தினம் வீட்டுக்கு வந்ததும் எப்படித் தெரியும் என்ற கேள்விக்கு விடை மிகச் சுலபம். பள்ளத்திலிருந்து பொறுமை இழந்து வெளியேறிய முத்துவை எதிராஜ் பிடித்துக் கொண்டான். பிடித்தவுடன் சத்திய வாக்குத் தவறாத முத்து பள்ளத்தில் ரவியோடு தான் இருந்த போது நடந்த சம்பாஷணையை அட்சரப் பிசகில்லாமல் ஒப்பித்துவிட்டான். உடனே அவனையும் அழைத்துக் கொண்டு ராஜரத்தினம் வீட்டுக்கு வந்து சேர்ந்தான் எதிராஜ்.

வந்தவுடன் முத்து, ''ரவி! எல்லாத்தையும் சொல்லிட்டேண்டா'' என்று பரிதாபமாகக் கூவிக்கொண்டே ரவியிடம் ஓடினான்.

தன்மானம் இழந்து நின்ற சின்னதுரை, அந்த இடத்தில் நிற்க மனமின்றி அப்போதுதான் வாசலை நோக்கி வந்து கொண்டிருந்தார். அவரைப் போகவிடாமல் வாசற்படியில் நின்ற எதிராஜ் தடுத்துப் பிடித்துக் கொண்டான்.

தன் கையிலிருந்த துப்பாக்கியைச் சின்னதுரை முதுகில் பொருத்தி, ரவியைப் பார்த்து, ''இவர் யாருன்னு எனக்குத் தெரியாது. இப்ப நீ நகையை எங்கிட்டே தூக்கிப் போட்டுடு. இல்லாட்டி இவரை இப்படியே சுட்டுக் கொன்னுப்புடுவேன். இந்த ஆள் பொழைக்கணும்னு, நகையை அங்கிருந்தே எங்கிட்டே போட்டுடு!'' என்றான்.

''நகையைப் போட்டுடுப்பா... போனாப் போவட்டும்'' என்றார் ராஜரத்தினம் அழாத குறையாக.

''முடியாது. சின்னதுரை எனக்கு ஒரு சத்தியம் செய்து கொடுத்தா நகையைப் போடறேன். இல்லாட்டி அவர் செத்தாலும் எனக்கு அக்கறையில்லே'' என்றான் ரவி.

சபாபதி கொதித்தெழுந்தார். ''அறிவுகெட்ட ராஸ்கல்! சித்ராவைக் கல்யாணம் செய்து கொடுக்கிறதா சத்தியம் வாங்கிக்கலாம்னு பார்க்கிறியா? இந்தச் சமயத்திலே நீ அப்படியே சத்தியம் வாங்கிக்கிட்டாக்கூட நானே அந்தக் கலியாணத்துக்குக் குறுக்கே நிப்பேன்'' என்றார் சபாபதி.

''இல்லேப்பா! நான் அந்தச் சத்தியம் கேக்கலே. அந்த விஷயத்திலே அவர் இஷ்டம் போல் செய்யட்டும்'' என்றான் ரவி.

''பின்னே இந்தச் சமயத்திலே என்னடா சத்தியம்?''

''நான் எவ்வளவோ பொய் சொன்னாலும், ஒரு விஷயத்துலே நிஜம் சொன்னேன். சின்னதுரை ரேஸ் பைத்தியத்தை ஒழிச்சுக் கட்டறதா,—சித்ராவுக்கு வாக்குக் கொடுத்தேன். அதை நிறைவேத்தாட்டி என் மனசு பொறுக்காது. அதுக்கு இதான் சந்தர்ப்பம். அவர் இனி ரேஸுக்குப் போகிறதில்லேன்னு சத்தியம் செய்தா நகையைப் போடறேன். இல்லாட்டி

என்ன நடந்தாலும் சரி, நகையைப் போட முடியாது'' என்றான் ரவி.

சபாபதி தம் மகனின் பெருந்தன்மையை எண்ணிப் பெருமிதத்தால் பூரித்து நின்றார்.

சின்னதுரை ரவியைப் பார்த்து, ''ரவி, நீ இவ்வளவு பெரிய மனுஷன்னு, எனக்குத் தெரியலே. இனிமே நான் எம்பா ரேஸுக்குப் போறேன்? நான் இப்ப சத்யம் செய்தாக்கூட உயிருக்குப் பயந்து செய்த சத்யமா நினைச்சாலும் நினைப்பீங்க. ஆனா நான் உண்மையா, சத்யமா, மனசாரச் சொல்றேன். என் ரேஸ் பழக்கத்தை இன்னியோடே விட்டுட்டேன்'' என்றார்.

ரவி நகையைத் தூக்கிப் போட்டான். எதிராஜ் அதைப் பிடிக்கவும், போலீஸார் அவன் பின் வந்து அவன் கையைப் பிடிக்கவும் சரியாக இருந்தது. ரவி, ''ராஜரத்தினம் வீட்டுக்கு வரும் போதே வழியில் போலீசுக்குத் தகவல் கொடுத்துட்டுத்தான் வந்தேன்'' என்று மற்றவர்களுக்கு விளக்கினான். போலீஸாருடன் வந்த டாக்டர் மேகநாதனும், ரவியுமாக எல்லோருக்கும் நடந்த விஷயங்களையெல்லாம் விவரித்தார்கள்.

தணிகாசலம் பயபக்தியோடு ரவியை நெருங்கி, ''அப்பா, ரவி! நான் இனிமே முத்துவை என் மகன்னு சொல்லிக்கலாம் இல்லியா?'' என்று அனுமதி கேட்டார்.

சின்னதுரை ரவியிடம், ''ரவி, என்னை மன்னிச்சு, ஒண்ணும் மனசுலே வெச்சுக்காம சித்ராவைக் கல்யாணம் செய்துக்கப்பா. சபாபதி, நீயும் நடந்ததையெல்லாம் மறந்து என்னை மன்னிச்சுடு'' என்றார்.

பேச்சு வளராமல், சித்ரா - ரவி, முத்து — கிரிஜா கல்யாணங்கள் நிச்சயிக்கப்பட்டன.

கல்யாணங்கள் நடந்து முடிந்து சில ஆண்டுகளுக்குப் பிறகு சென்னைப் பள்ளிக்கூடம் ஒன்றில் உபாத்தியாயர் ''சனீசுவரன், சனீசுவரன்'' என்று கூப்பிட ஒரு பையன் எழுந்து, ''எஸ் ஸார்'' என்று கூறிக் கொண்டிருந்தான். தான் சனீசுவர பகவானிடம் வேண்டிக் கொண்டதன்படியே தன் மகனுக்குச் சனீசுவரன் என்றே நாமகரணம் செய்திருந்தான் ரவி.

இந்த நிகழ்ச்சி கல்யாணங்களுக்குநெடு நாட்கள் கழித்து நடந்தது. கல்யாணம் முடிந்தவுடன் நடைபெற்ற விவரத்தையும், இந்தப் புராணத்தைப் படிப்பவர்கள் அறிய வேண்டியது அவசியமாகிறது.

'ஹனிமூன்' போவதற்கு மணமக்கள் நால்வரும் பணம் கேட்க, தந்தைமார்கள் மறுத்து விட்டனர்.

உடனே சித்ரா, ''ரவி, நீங்க வாங்க ரேஸுக்குப் போகலாம். நீங்க சொல்ற குதிரைதான் ஜெயிக்குமே..... ஹனிமூனுக்கு ரேஸிலேயே பணம் சம்பாதிக்கலாம். இதுவே நம்ம குடும்பத்துக்கும் ரேஸுக்கும் கடைசிச் சம்பந்தம்'' என்று கூற ரவி, முத்து, கிரிஜா, சித்ரா நால்வரும் அடுத்த நாள் குதிரைப் பந்தயத்தில் ஆஜரானார்கள். ரவி சொன்ன குதிரை மேலேயே பணம் கட்டப்பட்டது. குதிரையின் பெயர் சுபம். பந்தயம் ஆரம்பித்தது.

''கம் ஆன் சுபம் கம் ஆன் சுபம்'' என்று நால்வரும் ஏககாலத்தில் கூவிக் கொண்டிருந்தனர்.

பந்தயத்தில் ஓடிக் கொண்டிருந்த சுபம், 'தன்னை யார் இவ்வளவு அன்பாகக் கூப்பிடுகிறார்கள்' என்று இவர்கள் இருந்தபக்கம் பார்வையைச் செலுத்திற்று.

''கம் ஆன் சுபம்!''—நால்வரும் கூவியழைத்தனர். இந்த அன்புக் குரலைத் தாங்க முடியாத சுபம், பந்தயப் பாதையை விட்டு, விலகி வேகமாக இவர்கள் இருந்த இடத்துக்கே வந்து நின்றது!



# வானொலி விபரீதம்

அ. இராமதுரை

**1938**ம் ஆண்டு, செப்டம்பர் மாதம் முப்பதாம் நாள்!

"இரவு எட்டு மணி இருக்கும். நியூஜெர்ஸி மாநிலத்தில் — அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ளது — உள்ள தமது வீட்டில் ஹோமர் ரீட்ஜர் என்பவர் உணவுண்ட பின் வானொலி நாடகம் ஒன்றைக் கேட்டு ரசிப்பதற்காக வானொலிப் பெட்டியை இயக்கினார். அவர் மட்டுமல்ல; அவரைப் போன்ற லட்சக் கணக்கான அமெரிக்கர்கள் அன்றிரவு நடக்கவிருக்கும் விண்வெளி மெர்க்குரி தியேட்டர்ஸ் தயாரித்து அளிக்கும் "உலகப் போர்" என்ற நாடகத்தைக் கேட்பதற்குத் துடியாகத் துடித்துக் கொண்டிருந்தார்கள்.

சரியாக எட்டு மணி இரண்டு நிமிடங்கள் ஆனதும் எச். ஜி. வெல்ஸ் எழுதிய "உலகப் போர்" நாடகம் ஆரம்பமாயிற்று. நாடகத்தின் முதற் காட்சியில் பேராசிரியர் ஃபாரல் என்பவர் செவ்வாய்க் கிரகத்தில் ஏதோ சில வெடிப்புகள் இன்றிரவு நிகழ்ந்து



கொண்டிருப்பதாகவும் அவை என்னவென்றே புரியவில்லை என்றும் கூறினார். அவர் கூறி முடித்ததும் சில நிமிடங்கள் பின்னணி இசை ஒலித்தது. அது முடிந்ததும் பேராசிரியர் பியர்ஸன் என்ற புகழ் பெற்ற விண்வெளி ஆராய்ச்சியாளர் பிரின்ஸ்டன் நகரில் — நியூஜெர்ஸிக்கு அருகில் உள்ளது — பயங்கர பூகம்பம் சில நிமிடங்களுக்கு முன்பு நிகழ்ந்ததாகவும் அதற்கும் செவ்வாய்க் கிரகத்தில் உள்ள வெடிப்புகளுக்கும் அதிக சம்பந்தம் உண்டு என்றும் அறிவித்தார்.

சில நிமிடங்கள் வானொலியில் மயான அமைதி நிலவியது. திடீரென வானொலியில் ஒரு குரல் பயங்கரமாக ஒலித்தது.

"நியூஜெர்ஸிக்குப் பதினொரு மைல்கள் தொலைவில் உள்ள குரோவர்ஸ் மில் என்ற சிற்றூரில் விண்வெளியிலிருந்து முப்பது கஜங்கள் விட்டமுள்ள பிரம்மாண்டமான, என்னவென்று சொல்ல முடியாத ஒரு விசித்திரப் பொருள் இறங்கியது" என்று ஒருவர் அறிவித்தார்.

அந்த அறிவிப்பைத் தொடர்ந்து வானொலியில் ஒரு கூக்குரல் கேட்டது. யாரோ நூறு நூற்றைம்பது நபர்கள் ஒரே நேரத்தில் "வழியை விட்டு விலகுங்கள். நாங்கள் அந்த விண்வெளி விசித்திரத்தை உடனே பார்க்க வேண்டும்" என்று கூச்சலிடுவதும் அதைத் தொடர்ந்து போலீஸ்காரர்கள் கூட்டத்தினரை அடக்க முரட்டுத்தனமாக உத்தரவுகளை இடுவதும் கேட்டது.

வானொலிப் பெட்டியருகே உட்கார்ந்திருந்த ஹோமர் ரீட்ஜருக்குத் தாம் கேட்பது வானொலி நாடகமா அல்லது ஒரு நிஜ நிகழ்ச்சியின் ஒலிப்பதிவா என்று தீர்மானிக்க முடியாமல் ஒரே குழப்பமாக இருந்தது. அவருக்கு மட்டுமல்ல; லட்சக் கணக்கான வானொலி நாடக ரசிகர்களுக்கும் அப்பொழுது அப்படித்தான் இருந்தது.

திடீரென வாஷிங்டன் நகரிலும் அதைச் சுற்றியுள்ள சிற்றூர்களிலும் மின்சாரம் நின்று விடவே குழப்பம் மேலும் அதிகரித்தது.

வானொலியில் அச்சமயத்தில் பேராசிரியர் பியர்ஸனும், கார்ல் பிலிப்ஸ் என்ற விண்வெளி நிபுணரும் "அவ் விசித்திர விண்வெளி ஜந்து" எதாக இருக்கக் கூடும் என்று விவாதித்துக் கொண்டிருந்தனர்.

அவர்களது விவாதத்தை இடைமறித்து ஒரு குரல் பரபரப்புடன் ஒலித்தது.

"அந்த விண்வெளி ஜந்து தன் தலையை வெளியே நீட்டுகிறது. அதனுடைய கண்கள் இரண்டும் நெருப்புக் கோளங்கள் போல் ஜொலிக்கின்றன. அதன் அருகில் போலீஸ்காரர் வாட்ஸன் நெருங்குகிறார். கடவுளே! அப்பொருள் வாட்ஸனின் முகத்தில் நெருப்பு ஜ்வாலையை அள்ளி வீசுகிறது. வாட்ஸன் இருந்த இடத்திலே இப்போது சாம்பல்தான் இருக்கிறது."

அவ்வறிவிப்பைத் தொடர்ந்து வானொலியில் அபாயச் சங்குகள் முழங்கும் ஒலிகளும் மக்கள் பயந்து கூக்குரல் இட்டுக்கொண்டு அங்குமிங்கும் ஓடும் சத்தமும் கேட்டன.

''நீதான் அப்பாவாம்
நான்தான் அம்மாவாம்...''

விஞ்ஞானத்தின் விந்தை சந்திர மண்டலம்வரை எட்டியது ஒருபுறம் இருக்கட்டும். அது பொம்மை உலகில் நிகழ்த்தியுள்ள அற்புதங்கள் எத்தனை தெரியுமா?



ஒரு பொம்மை இருக்கிறது; அதைக் கையில் தூக்கினால், ''அம்மா'' என்று அழைக்கும். முத்தம் கொடுக்கும்; கண்ணீர் பெருக்கி அழும்; மூன்று கிலோ மீட்டர்வரை நடக்கும்; பால் குடிக்கும்; கையிலுள்ள சிறு பந்தை எறியும்; உதட்டைப் பிதுக்கி 'அழகு' காட்டும்.

ஆதாரம்: ஜெர்மன் நியூஸ் வீக்லி
விளையாட விரும்புபவர்: சிவசக்தி

அவை முடிந்த பின் திடீரென ஓர் அறிவிப்பு: ''நியூஜெர்ஸி மாநிலத்தின் ராணுவத் தளபதி பிரிகேடியர் ஜெனரல் மாண்ட்கோமரி ஸ்மித் பேசுகிறேன். நிலைமை கட்டுக்கடங்காமல் போகவே நான் ராணுவச் சட்டத்தைப் பிரகடனப்படுத்தியுள்ளேன். இதுவரை செவ்வாய் மனிதர்களுக்கு நாற்பது நபர்கள் பலியாகிவிட்டனர். பொதுமக்கள் எச்சரிக்கையாக இருக்கும்படி கோரப்படுகிறார்கள்.''

அவ்வளவுதான். தாங்கள் இதுவரை கேட்டதெல்லாம் எச். ஜி. வெல்ஸ் எழுதிய ''உலகப் போர்'' என்ற கதையின் நாடகம் என்பதையே இந்நகர மக்கள் மறந்துவிட்டனர். நிஜமாகவே செவ்வாய் மனிதர்கள் அமெரிக்காவின் மீது படையெடுத்து விட்டதாகவே அவர்கள் கருதினர்.

வானொலி நாடகத்தைக் கேட்டுக்கொண்டிருந்த நூற்றுக் கணக்கான அமெரிக்க வீரர்கள் உடனே தங்கள் தலைமைக் காரியாலயத்துக்குத் தொலைபேசி மூலம் தாங்கள் எங்கு எப்படிப் போரிட வேண்டும் என்று வினவத் தொடங்கினர். அந்த மாநிலத்தில் உள்ள மருத்துவர்களும் தாதியர்களும் முதலுதவிப் பெட்டிகள் சகிதம் ஆம்புலன்ஸ் வண்டிகளில் ஏறிப் போர்க்களத்தை நோக்கிப் புறப்படலானார்கள்; செவ்வாய் மனிதர்களுக்கும் அமெரிக்கர்களுக்கும் நடைபெறும் யுத்தத்தில் முதலுதவிச் சிகிச்சை செய்ய!

இதற்கிடையில் வானொலியில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உள்நாட்டுக் காரியதரிசி, நாட்டில் நிலைமை பயங்கரமாக இருப்பதாக அறிவிக்கவே தாங்கள் கேட்பது வெறும் நாடகம் தான் என்று நம்பியிருந்த சில ஆயிரக்கணக்கான அமெரிக்கர்கள் நிஜமாகவே அமெரிக்கா மீது செவ்வாய்க்கிரக வாசிகள் படையெடுத்து விட்டதாகக் கருதினர். அதன் பலனாகக் குழப்பம், திகில், அச்சம், மயக்கம் முதலிய உணர்ச்சிகள் நியூஜெர்ஸி மாநிலத்தில் தாண்டவமாட ஆரம்பித்தன. நாடெங்கிலுமுள்ள போலீஸ் ஸ்டேஷன்களில் உள்ள டெலிபோன்கள் கணகணவென முழங்கிக் கொண்டிருந்தன. அமெரிக்கர்களுக்குத் திடீரெனப் பைத்தியம்தான்பிடித்துவிட்டதோ என்று போலீஸ்காரர்களுக்குக் குழப்பமாக இருந்தது.

சரியாக ஒன்பது மணிக்கு நாடகம் முடிந்ததும் நியூஜெர்ஸி மாநிலப் போலீஸ் அதிகாரிகள் வானொலி நிலையத்தை நோக்கி விரைந்தனர். அங்கு அவர்கள் நாடகத்தில் நடித்தவர்களையும் தயாரித்து டைரக்ட் செய்தவரையும் பிடித்து விசாரித்தனர்.

லட்சக்கணக்கான மக்களைக் குழப்பத்தில் ஆழ்த்தியதற்காக நாடகத்தின் டைரக்டரின் மீது வழக்குப் போடப் போவதாக அச்சுறுத்தினர். ஆனால் அவரோ சிறிதும் அச்சமின்றி, ''நான்தான் நாடக ஆரம்பத்திலேயே மெர்க்குரி விண்வெளித் தியேட்டர்ஸ் அளிக்கும் எச். ஜி. வெல்ஸின் ''உலகப் போர்'' என்ற நாடகம் இப்போது தொடங்கும்'' என்று அறிவித்திருந்தேனே? ஆதலால் நீங்கள் என்னை ஒன்றும் செய்ய முடியாது, சட்டப்படி!'' என்றார்.

அமெரிக்க ஆகாசவாணியில் ஒரு புரட்சியையே நிகழ்த்திவிட்ட அந்த நாடகத்தின் டைரக்டர் யார் தெரியுமா?

அவர்தான் ஹாலிவுட்டில், திரைப்பட நெறியாக்கத்தில் ஒரு மேதையாகக் கருதப்படும் நடிகர், ஆர்ஸன் வெல்ஸ்! அப்பொழுது அவருக்கு வயது இருபத்தேழு! முன்பக்கத்தில் அவருடைய படத்தைத்தான் காண்கிறீர்கள்.

## டாக்டரான காரணம்

காலஞ்சென்ற டாக்டர் ஆல்பர்ட் ஷ்வைட்சரிடம் அவர் மருத்துவத் தொழிலை மேற்கொண்ட காரணத்தைப் பற்றிக் கேட்டபோது அப்பெருமகன் புன்முறுவலித்துக் கொண்டே பின்வருமாறு கூறினார்:

''வாய் பேசாமல் செய்யக்கூடிய ஒரு வேலை வேண்டும் என்று தேடிப்பார்த்தேன். கடைசியில் இது கிடைத்தது.''

— எஸ். ரங்கராஜன் ('நல்வழி'யிலிருந்து)

# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு

## வலியை அதி வேகமாக வெளியேற்ற




# மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

**வலிதான் எங்கள் பிரச்னை:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கூடத்தில் வலியைப் பற்றிய ஆராய்ச்சிகள் செய்துவரும் விஞ்ஞானிகள் வலியை வேகமாக வெளியேற்றுவதற்கான புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளனர்—அதுதான் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'.

**மைக்ரோஃபைன்ட் என்றால் என்ன?** புதியதொரு விசேஷமான செய்முறையின் மூலம், 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள வலிநிவாரணப் பொருளை மேலும் 30 மடங்கு நுணுக்கமாக்கியிருப்பதைத்தான் மைக்ரோஃபைன்ட் என்கிறோம். இப்பொழுது ஒவ்வொரு மாத்திரையிலும் இந்த வலிநிவாரணப் பொருள்களின் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக் கூறுகள் அடங்கியிருக்கின்றன. இதன் விளைவாக, முன்பைவிட இருமடங்கிற்கும் அதிகமான வலிநிவாரணச் சக்தி, மும்மடங்கு வேகமாக இயங்கி வலியைத் துரிதமாக வெளியேற்றிவிடுகிறது.

**வேகமாகச் செயல்புரிகிறது—நீடித்த பயனைத் தருகிறது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள சுறுசுறுப்பாக இயங்கும் வலிநிவாரணப் பொருள், மிகவும் சுலபமாகவும், துரிதமாகவும் இரண்டறக் கலந்து உங்கள் உடலில் 5 முதல் 7 மணி நேரம் வரை தங்கியிருக்கிறது. இதனால் தான் மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வலியை அதி வேகமாக வெளியேற்றி, நீண்ட நேரம் பயனளிக்கிறது.

**உட்கொள்ளச் சுலபமானது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வை வெறும் மாத்திரையாகவோ, தண்ணீரில் கலந்தோ, ஒரு டம்ளர் தண்ணீருடனோ அல்லது சூடான பானத்துடனோ—எப்படி வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

**கீழ்க்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல் வலி • பல்வலி • மூட்டுவலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளூ • டெங்கு • தொண்டை அழற்சி.

**சாப்பிடும் அளவு:** வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்




ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறுகள் கொஞ்சமாகவே இருப்பதால் அவை உங்கள் உடலில் கலப்பதற்கு அதிக நேரமாகிறது—நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அதிக நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது.




மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன—எனவே, அது வேகம் துரிதமாக இரண்டறக் கலந்து, விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

---

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிநவீனமான வலிநிவாரணியாகும்.






புதிய

மைக்ரோஃபைன்ட்

**ஆஸ்ப்ரோ**

அதி வேகமாக
வலியை வெளியே
இழுத்துவிடுகிறது

நிக்கோலஸ் தயாரிப்பு

# மகாபாரதம்

## ராஜாஜி



வாண்டு மாமா
எழுதும்

# ஓநாய்க் கோட்டை

சித்திரத் தொடர்கதை

மற்றும்—

குறு நாவல்:

நடு வழியில் ஒரு ரயில்

— ஸ்ரீ வேணுகோபாலன்

புதிய அம்சங்கள்:

சுவையான சர்ச்சைகள்

அல்டாப் அப்பாசாமி!

விளையாட்டில் வீராங்கனைகள்

ஒருமைப்பாடு விடு

விஞ்ஞானக் கட்டுரை:

அணுவின் இரகசியம்

# கல்லுக்குள் ஈரம்

வெள்ளி விழா
இரண்டாவது
பரிசு
நாவல்





## அத்தியாயம் 51

## கண்ணீரில் கரைந்தார்

புது தில்லி ரயில்வே நிலையத்தில் மக்கள் மொய்த்துக் கொண்டிருந்தனர். ரங்கமணியும் தீக்ஷிதரும் வண்டியை விட்டு இறங்கி நேரே பிரயாணிகள் தங்கும் அறைக்குச் சென்றார்கள். ரயில்வே நிலையத்தைச் சேர்ந்த பிரயாணிகள் தங்கும் அறை ஒன்றை வாடகைக்கு அமர்த்திக் கொண்டார்கள். பனிக் காலமாதலால் குளிர் அதிகமாகவே இருந்தது. காலையில் மணி பத்தாகியும் பனி நீங்கிய பாடில்லை.

ரங்கமணியை அறையில் விட்டு விட்டுத் தீக்ஷிதர் பிர்லா மாளிகைக்கு விரைந்தார். மகாத்மாவை ரங்கமணி சந்திப்பதற்கு ஏற்பாடு செய்யத்தான் சென்றிருந்தார்.

ரங்கமணி பரபரப்படைந்திருந்தான். மகாத்மாவைச் சந்திக்கப் போகிறோம் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில்

ர. சு. நல்லபெருமாள்

குறுகுறுப்பை மூட்டியது. பதினைந்து ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் இரவு மகாத்மாவைச் சந்தித்த சம்பவம் நினைவில் சுழன்றது. பெட்டியைத் திறந்து பார்த்தான். உள்ளே தந்தச் சிலுவை பத்திரமாயிருந்தது. அதை எடுத்து உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். மகாத்மாவைப் பார்த்ததும் முதலில் சிலுவையைத்தான் அவரிடம் கொடுக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான்.

"ஓ... தாங்கள் கிறிஸ்தவரா?" என்று ஹிந்தியில் யாரோ கேட்கும் குரலைக் கேட்டு வாசல் பக்கம் திரும்பினான் ரங்கமணி.

வாசலில் ஓர் இளைஞன் நின்று கொண்டிருந்தான். சிலுவைப் பொம்மையைச் சட்டைப் பைக்குள் போட்டுவிட்டு,



''உள்ளே வாருங்களேன்'' என்றான் ரங்கமணி, ஹிந்தியில். அந்த இளைஞன் உள்ளே வந்து நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

''இந்துதான். இது ஒருவர் எனக்கு அன்பளிப்பாகக் கொடுத்தது'' என்றான் ரங்கமணி.

''எங்கிருந்து வருகிறீர்களோ?''—அந்த வாலிபன் கேட்டான்.

''தமிழ் நாட்டிலிருந்து.''

''ரொம்ப சந்தோஷம். என் பெயர் விநாயகராவ். வியாபாரம் சம்பந்தமாக வந்திருக்கிறேன்'' என்றான் இளைஞன்.

''என் பெயர் ரங்கமணி'' என்றான் ரங்கமணி.

''தங்களிடம் கொஞ்சம் எண்ணெய் இருக்குமா?'' — விநாயகராவ் கேட்டான்.

''என்ன எண்ணெய்?''

''எதுவாக இருந்தாலும் சரிதான்.''

''தேங்காய் எண்ணெய் போதுமா?''

''போதுமே.''

ரங்கமணி தேங்காய் எண்ணெய்ப் பாட்டிலை எடுத்துக் கொடுத்தான். டில்லிக் குளிரில் தேங்காய் எண்ணெய் உறைந்து கட்டியாக இருந்தது.

''என்ன வேலையாக இங்கு வந்திருக்கிறீர்களோ?'' என்று விநாயகராவ் எண்ணெயை வாங்கிக் கொண்டே கேட்டான்.

''மகாத்மாவைச் சந்திக்க வந்திருக்கிறேன்'' என்று ரங்கமணி சொன்னதும் விநாயகராவ், துள்ளிக் குதித்தான்.

''ஆ...! பாபுஜியைச் சந்திக்கவா? என்ன விஷயம்?'' என்று ஆர்வத்தோடு கேட்டான்.

''சும்மாதான்... அவரைப் பார்க்க வேண்டும் என்று ஆசை.''

''இந்த அறையில் தனியாக இருக்கிறீர்களே, என் அறைக்கு வாருங்களேன், பேசிக் கொண்டிருக்கலாம்'' என்று அழைத்தான் விநாயகராவ்.

பொழுது போகாமல் தத்தளித்துக் கொண்டிருந்த ரங்கமணி உடனே விநாயகராவோடு புறப்பட்டு விட்டான். பக்கத்து அறையில்தான் விநாயகராவ் தங்கியிருந்தான். அந்த அறைக்குள் நுழைந்தபோது, உள்ளே இன்னொரு வாலிபன் சோபாவில் சாய்ந்தபடி ஏதோ செய்து கொண்டிருந்தான். அறைக் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டதும் அவன் எதையோ பரபரப்புடன் தலையணைக்கு அடியில் ஒளித்து வைத்ததை ரங்கமணி கவனித்தான். பக்கத்தில் சென்றதும் தலையணைக்குள்ளிருந்த பொருளின் ஒரு பகுதி மறைக்கப்படாமல் வெளியே துருத்திக் கொண்டிருந்ததைக் கண்டதும் துணுக்குற்றான்.

அது ஒரு கைத்துப்பாக்கி.

அதைக் கண்டதும் ரங்கமணியின் உடல் சிலிர்த்தது. அதையே வெறிக்கப் பார்த்தான்.

''இவன் நாராயண ராவ். என் கூட்டாளி'' என்று அறைக்குள்ளிருந்த வாலிபனை ரங்கமணிக்கு அறிமுகம் செய்து வைத்தான் விநாயகராவ்.

இவர்களைக் கண்டதும் பரபரப்புடன் எழுந்து நின்றான், நாராயண ராவ். ரங்கமணியை உற்றுப் பார்த்தான்.

''இவர் பெயர் ரங்கமணி. தமிழ் நாட்டிலிருந்து வந்திருக்கிறார். காந்திஜியைப் பார்க்க வந்திருக்கிறாராம்'' என்றான் விநாயகராவ்.

இதைக் கேட்டு நாராயண ராவ் பரபரப்படைந்தான். ''அப்படியா....உட்காருங்கள்'' என்று ரங்கமணிக்கு ஒரு நாற்காலியைச் சுட்டிக் காட்டினான்.

''ஏன் இந்தத் துப்பாக்கி?''—ரங்கமணி வெறுப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டே கேட்டான். அப்போதுதான் தலையணைக்கு அடியில் நுழைத்த துப்பாக்கி வெளியே சிறிது நீட்டிக் கொண்டிருப்பதைக் கவனித்தான், நாராயண ராவ்.

''தற்காப்புக்காகத்தான். நாங்கள் வியாபார விஷயமாகப் பல இடங்களில் திரிவோம். அதற்காகத்தான் துப்பாக்கி லைசென்ஸ் வாங்கியிருக்கிறேன். டில்லியில் எந்தச் சமயத்தில் பணத்தைக் கொள்ளையடிப்பார்கள் என்று தெரியாது. அதுவும் இரவு வேளைகளில் ஆயுதம் இல்லாமல், பணத்தோடு நடமாடுவது ஆபத்துத்தான்'' என்று கூறிவிட்டுத் தலையணைக்கு அடியிலிருந்த துப்பாக்கியை எடுத்துச் சுத்தம் செய்யத் தொடங்கி விட்டான், நாராயண ராவ். பிறகு கேட்டான்:

''பாபுஜியை எப்போது சந்திக்கப் போகிறீர்கள்?''

''நிச்சயமாகத் தெரியவில்லை. என் நண்பர் ஒருவர் இது விஷயமாகத் தெரிந்து வரப் போயிருக்கிறார்'' என்றான் ரங்கமணி.

''காந்திஜியை நேரில் சந்திக்க எங்களுக்கும் வெகு நாட்களாக ஆசை. நீங்கள் போகும்போது எங்களையும் அழைத்துப் போக முடியுமா?'' என்று கேட்டான், விநாயகராவ்.

''அது பற்றி எனக்குத் தெரியாது. என் நண்பர் வந்ததும் கேட்டுச் சொல்கிறேன். நீங்கள் என்னோடு வருவதில் எந்தச் சங்கடமும் இராது என்று நினைக்கிறேன்.''

இதோ :

# மாஜிக்

# கண்ணுக்கு வெண்மை
# கருத்துக்குப் புதுமை

ஆம், **மாஜிக்** என்றாலே அலாதி தான். அதன் அபரிமித வெண்மையாக்கும் ஆற்றல் வெள்ளைத் துணிகளைப் புதியன போல் வெளுக்கிறது. அதன் தூய்மை மணமோ துணிகளிலே நிலைக்கிறது. **மாஜிக்** கலக்கும் நுரைவளம் இழைகளுக்கிடையில் உள்ள அழுக்குகளை வேரோடு களைகிறது, வீட்டுச் சலவையை சுலபமானதாகவும் சிக்கனம் உள்ளதாகவும் செய்கிறது. பருத்தியோ, பட்டோ, நைலானோ, டெரீனோ, என் கம்பளித் துணிகளையும் கூட **மாஜிக்** குடன் சலவை செய்யுங்கள். **மாஜிக்** ஒரு விந்தை மிக்க சலவைத் தூள்!




***மாஜிக் வெண்மை, மாஜிக் மெருகு, மாஜிக் புதுமை!***

டாடா
தயாரிப்பு

CMTM-10-123-TM

# வலியா? ஜலதோஷமா?





## பத்து சக்திமிக்க மருந்துகள் சேர்ந்தது

# அமிர்தாஞ்சனம்

## உங்களுக்கு உடனடி நிவாரணம் அளிக்கிறது

சக்தி வாய்ந்த பத்து மருந்துகள் கொண்ட அமிர்தாஞ்சனம், வலிகளைப் போக்கி ஜலதோஷத்தை நீக்குவதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டது. எழுபது ஆண்டுகளாக லட்சக் கணக்கான குடும்பங்களில் பயன்பட்டு வரும் கை கண்ட நிவாரணி அது.

**வலிகளுக்கு:** தசை வலி, தலைவலி, சுளுக்கு, அல்லது மூட்டு வலி, எதுவாக இருந்தாலும், வலியுள்ள இடத்தில் சிறிது அமிர்தாஞ்சனம் தடவுங்கள். சில நிமிடங்களில் நிவாரணம் ஏற்படுவதை உணர்வீர்கள்!

**ஜலதோஷத்துக்கும், மார்புச் சளிக்கும்:** சாதாரண ஜலதோஷமானால், மூக்கின் உட்புறத்திலும் மூக்கின் கீழும் அமிர்தாஞ்சனம் தடவுங்கள்; அல்லது சிறிதளவு அமிர்தாஞ்சனம் எடுத்து வெந்நீரில் இட்டு, ஆவியை சுவாசியுங்கள். மார்புச் சளியானால், மார்பில் அமிர்தாஞ்சனம் தடவுங்கள். மிகமிக விரைவில் நல்ல நிவாரணம் ஏற்படுவதைக் காண்பீர்கள்.

ஒவ்வொரு முறை பயன் படுத்துவதற்கும் சிறிதளவு அமிர்தாஞ்சனமே போதும்; ஆகவே ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்துக்கு மாதக் கணக்கில் வரும். அமிர்தாஞ்சனத்தை எப்பொழுதும் கையோடு வைத்திருங்கள்.

**அமிர்தாஞ்சனம்** கையடக்கமான, குறைந்த விலை டின்களிலும் கிடைக்கிறது.







**அமிர்தாஞ்சன் லிமிடெட்,**
மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-டெல்லி

AM-3769

''எங்களையும் நீங்கள் அழைத்துச் சென்றால் அந்த உதவியை நாங்கள் ஒரு நாளும் மறக்க மாட்டோம்'' என்றான், நாராயண ராவ் துப்பாக்கியைத் துடைத்துக் கொண்டே. பிறகு, தேங்காய் எண்ணெய்ப் பாட்டிலை விநாயகராவிடமிருந்து வாங்கித் தீக்குச்சியைப் பற்ற வைத்துத் தீயில் பாட்டிலைச் சிறிது சுட வைத்தான். இறுகியிருந்த எண்ணெய் இளகியதும் சில பாகங்களில் சில சொட்டுக்களை விட்டுத் துப்பாக்கியைச் சோதித்துப் பார்த்தான். பிறகு ரங்கமணியிடம் திரும்பி, ''பாபுஜிக்கு 'வரவர முஸ்லிம்கள் மீதுதான் பற்று அதிகமாகிறது இல்லையா?'' என்று ரங்கமணியிடம் கேட்டான்.

# முதல் முயற்சி — 6




''சிறுபான்மையோரிடம் அக்கறை காட்டுகிறார்'' என்றான் ரங்கமணி.

''அளவுக்கு மீறித்தான் அக்கறை காட்டுகிறார்'' என்று எரிச்சலுடன் குறுக்கிட்டுச் சொன்னான் விநாயகராவ்.

''மகாத்மாவின் செயல்களையோ, எண்ணங்களையோ கணக்கிட்டுப் பார்க்கும் திறமை நமக்குப் போதாது. அதற்குள்ள அருகதையும் நமக்கு ஏது?'' என்றான் ரங்கமணி.

''ஆமாம், நீங்கள் சொல்வதும் சரிதான். இருந்தாலும் முஸ்லிம்களின் பக்கமே ஒருதலைப்பட்சமாகப் பாபுஜி பேசும்போது நமக்குச் சங்கடமாகத்தான் இருக்கிறது'' என்றான், நாராயணராவ் சிரித்துக் கொண்டே.

திடீரென்று கைத் துப்பாக்கியில் ஏதோ கோளாறு இருப்பது தெரிந்தது. அதை விநாயகராவிடம் நீட்டி, ''சரியாக வேலை செய்யவில்லையே?'' என்றான். துப்பாக்கியை வாங்கி விநாயகராவ் சோதித்துப் பார்த்தான்.

''ஆமாம்... சரியாக இல்லையே. என்ன செய்வது?'' என்றான் பரபரப்புடன்.

''ஏன், என்ன கோளாறு? இப்படிக் கொடுங்கள்'' என்று கையை நீட்டினான், ரங்கமணி. துப்பாக்கியை ரங்கமணியிடம் கொடுத்தான் விநாயகராவ். துப்பாக்கியைச் சோதித்துப் பார்த்துவிட்டு, ''ஒன்றுமில்லை. குதிரைப் பக்கம் கொஞ்சம் கழன்றிருக்கிறது. ஸ்குரு டிரைவர் இருக்கிறதா?'' என்று கேட்டான், ரங்கமணி. நாராயண ராவ் ஒரு பெட்டியைத் திறந்து ஸ்குரு டிரைவரை எடுத்துக் கொடுத்தான். சிறிது நேரத்தில் துப்பாக்கியைப் பழுது பார்த்து நாராயணராவிடம் கொடுத்தான் ரங்கமணி. துப்பாக்கியைச் சோதித்துப் பார்த்துவிட்டு, ''பேஷ், சரியாகி விட்டதே! உங்களுக்குத் துப்பாக்கியிலும் பழக்கமுண்டு போலிருக்கிறது!'' என்று வியந்து கூறினான் நாராயணராவ்.

''அந்தப் பாவத்திலும் ஒரு காலத்தில் மூழ்கியிருந்தேன். அதற்கெல்லாம் பிராயச்சித்தம் தேடத்தான் இங்கு வந்திருக்கிறேன்'' என்றான் ரங்கமணி பெருமூச்சு விட்டுக் கொண்டே.

அப்போது வாசல் பக்கத்தில் தீக்ஷிதர், அவனைக் கூப்பிடும் குரல் கேட்கவே வாசலை நோக்கி விரைந்தான்.

''எங்களை மறந்து விடாதீர்கள். பாபுஜியிடம் எங்களையும் அழைத்துச் செல்லுங்கள்'' என்றான் விநாயகராவ்.

''ஆகட்டும். கேட்டுச் சொல்கிறேன்'' என்று கூறிவிட்டு அந்த அறையை விட்டு வெளியே வந்தான், ரங்கமணி.

''என்ன, அதற்குள் சிநேகம் பிடித்து விட்டாயா?'' என்றார் தீக்ஷிதர்.

''நான் பிடிக்கவில்லை. அவர்கள்தான் என்னைப் பிடித்துக் கொண்டார்கள்'' என்றான் ரங்கமணி, சிரித்

துக்கொண்டு. பிறகு, ''காந்திஜியை எப்போது சந்திக்கலாம்?'' என்று ஆவலோடு கேட்டான்.

''பிர்லா மாளிகையில் கூட்டம் அதிகமாயிருக்கிறது. உள்ளே சென்று காந்திஜியைப் பார்க்க முடியவில்லை. மத்தியானம் போய்ப் பார்க்கிறேன்'' என்றார் தீக்ஷிதர்.

''நாம் போகும்போது பக்கத்து அறையில் இருப்பவர்களையும் அழைத்துப் போகலாமா?''

''நமக்கே எப்போது பேட்டி கிடைக்கும் என்று தெரியவில்லை. இதில் அவர்களையும் அழைத்துப் போகவா? வேடிக்கைதான்.''

''காந்திஜியைச் சந்திக்க அவர்களுக்கு அளவு கடந்த ஆசை. முடிந்தால் அழைத்துக் கொண்டு போவோமே.''

''சரி பார்க்கலாம். சாப்பிட்டுவிட்டு மத்தியானம் பிர்லா மாளிகைக்குப் போய்ப் பார்த்து வருகிறேன். பக்கத்து அறைக்காரர்களையும் தயாராக இருக்கச் சொல். நான் வந்ததும் உடனே புறப்பட்டு விடலாம்'' என்றார் தீக்ஷிதர்.

இருவரும் சாப்பிடுவதற்காகப் பக்கத்தில் இருந்த ஹோட்டலை நோக்கிச் சென்றார்கள்.

ஃ ஃ ஃ

**மா**லை நாலரை மணி வரை ரங்கமணி, தன் அறையில் தீக்ஷிதருக்காகக் காத்துக் கிடந்தான். பக்கத்து அறை நண்பர்கள் நாலு மணி வரை அவனோடு பேசிக் கொண்டிருந்தார்கள்.

''நேரமாகி விட்டால் பாபுஜியைச் சந்திக்க முடியாது. பிரார்த்தனைக் கூட்டத்துக்குப் போய்விடுவார். உங்கள் நண்பரை இன்னும் காணவில்லையே?'' என்று பொறுமை இழந்து கேட்டான் விநாயகராவ்.

''தெரியவில்லையே... ஒருவேளை நானேதான் காந்திஜியைச் சந்திக்க முடியுமோ என்னவோ?'' என்றான், ரங்கமணி, சந்தேகத்துடன்.

''நாங்கள் இன்று இரவே ஊருக்குத் திரும்ப வேண்டுமே... பரவாயில்லை. இன்னொரு முறை தில்லிக்கு வந்தால், காந்திஜியைச் சந்தித்துக் கொள்ளலாம்'' என்றான் நாராயணராவ்.

நான்கு மணிக்கு அந்த இரு நண்பர்களும் தங்கள் அறையைப் பூட்டி விட்டு வராந்தாவுக்கு வந்தார்கள்.

''எங்களுக்கு வேறு அவசர வேலை இருக்கிறது. இரவே ஊருக்குப் புறப்படவேண்டும். அதற்குள் இங்கு சில வேலைகளை முடிக்க வேண்டும். இரவு நாம் சந்திக்கலாம்'' என்று கூறிவிட்டு அவ்விருவரும் வெளியே சென்று விட்டார்கள்.

தனியே இருந்த ரங்கமணி பொறுமை இழந்து தவித்தான். பேச்சுத் துணைக்குக்கூட ஆள் இல்லை. காந்திஜியைச் சந்திக்க வேண்டும் என்ற துடிப்பு ஒருபுறம் அவனை அலைக்கழித்தது. புனுகுப் பூனை மாதிரி வராந்தாவில் உலவிக் கொண்டிருந்தான்.

நாலே முக்கால் மணிக்குத் தீக்ஷிதர் வந்து சேர்ந்தார்.

''புறப்படு சீக்கிரம். உன்னை உடனே காந்திஜி அழைத்து வரச் சொன்னார்'' என்று துரிதப்படுத்தினார் தீக்ஷிதர். சிலுவைப் பொம்மையை எடுத்துச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு புறப்பட்டான்.

இருவரும் ஒரு வாடகைக் காரில் பிர்லா மாளிகையை நோக்கி விரைந்தார்கள். காரில் போகும்போது தீக்ஷிதர் சொன்னார்:

''காந்திஜியை நான்கு மணிக்குத்தான் சந்தித்துப் பேச முடிந்தது. நீ வந்திருப்பதாகச் சொன்னதும் அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'அவன் வருவான் என்று தெரியும். விலகிச் சென்ற மகன் திரும்ப வந்து விட்டான்' பிறகு அங்கிருந்த கூட்டத்தைப் பார்த்துவிட்டுச் சிறிது யோசித்தார். 'நாளைக்கு அழைத்து வாருங்களேன்' என்றார். நான் வெளியே புறப்பட்ட போது சர்தார் வல்லபபாய் பட்டேல் உள்ளே வந்தார். வாசலுக்கு வந்து விட்ட என்னைக் காந்திஜி கூப்பிட்டார். 'நாளைக்குச் சந்திக்க முடியுமோ முடியாதோ? அவனை இப்போதே அழைத்து வாருங்கள்' என்றார். 'யாரை' என்று பட்டேல் கேட்டது என் காதில் விழுந்தது. அதற்குக் காந்திஜி சிரித்துக்கொண்டே 'எ பிராடிகல் ஸன்' என்று கூறியதும் எனக்குத் தெளிவாகக் கேட்டது.''

''நாம் போகும்போது யாராவது காந்திஜியுடன் பேசிக் கொண்டிருப்பார்களோ?'' என்று கேட்டான் ரங்கமணி.

''இருந்தால் என்ன? மகாத்மாவைச் சந்தித்ததும் என்ன சொல்லப் போகிறாய்?'' என்று கேட்டார் தீக்ஷிதர்.

''அவருடனேயே இருக்க என்னை அனுமதிக்கும்படி கேட்கப் போகிறேன்.''

''அது முடிகிற காரியமா? மேலும், நீ ஊருக்குத் திரும்ப வேண்டுமே.''

''தீக்ஷிதர்வாள், ஒரு முடிவோடு தான் டில்லிக்கு வந்திருக்கிறேன். நான் ஊருக்குத் திரும்பி வரப்போவ தில்லை'' என்றான் ரங்கமணி திட மாக. தீக்ஷிதர் திடுக்கிட்டார்.

''என்ன இது... ஏன் அப்படி?'' என்று அதிர்ச்சி யடைந்து கேட்டார்.

''எனக்கு இனி துணை மகாத்மா ஒருவர்தான். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்?''

''மனம் நொந்து போயிருக்கிறாய். காலம்தான் உன்னுடைய வேதனை களைத் துடைக்கும். நடந்ததை மறந்து விடு'' என்று ஆறுதல் சொன்னார் தீக்ஷிதர்.

எந்த ஆறுதலும் ரங்கமணியின் வேதனையைக் களையாது என்பதைத் தீக்ஷிதர் உணர்ந்திருந்தார். அந்தப் பிஞ்சு வயதிலேயே அவ்வளவு விரக்தி யடைந்து விட்டான் என்று அவர் மனம் தவித்தார்.

''மணி என்ன?'' — பரபரப்புடன் கேட்டார்.

ரங்கமணி கைக்கடிகாரத்தைப் பார்த்தான்.

''ஐந்தேகால்'' என்றான்.

''நேரமாகி விட்டது. நாம் போவ தற்குள் அவர் பிரார்த்தனைக் கூட் டத்துக்குப் புறப்பட்டு விடக் கூடாது'' என்றார் தீக்ஷிதர்.

பிர்லா மாளிகையின் காம்பவுண் டுக்கு வெளியே டாக்ஸி நின்றது. இரு வரும் காரை விட்டு இறங்கியபோது மக்கள் கூட்டம் கூட்டமாகப் பிர்லா மாளிகைத் தோட்டத்தில் நுழைவதைப் பார்த்தார்கள்.

''நேரமாகி விட்டது போலிருக் கிறதே'' என்று முனகிக் கொண்டே விரைந்து நடந்தார் தீக்ஷிதர். ரங்க மணி பரபரப்புடன் அவரைப் பின் தொடர்ந்து சென்றான்.

''அதோ காந்திஜி...! மாளிகையை விட்டு வெளியே வந்து விட்டாரே... சரி, நாளை சந்தித்துக் கொள்ளலாம்'' என்றார் தீக்ஷிதர்.

ரங்கமணி அவலுடன் பிர்லா மாளிகை வாசலை நோக்கினான். காந்திஜி நடந்து வருவது தெரிந்தது. பிரார்த்தனைக் கூட்டத்துக்கு அவர் வரும் பாதையின் இரு பக்கத்திலும் மக்கள் நெருக்கிக் கொண்டு நின்றார்கள். ரங்கமணி அந்தக் கூட்டத்தை நோக்கி விரைந்தான். காந்திஜியை மிக அருகி

---

கிழக்கு ஜெர்மனியிலிருந்து, இருபத்தெட்டு வயது இளைஞர், தம்மைப் பார்சல் செய்து சுதந்திர உலகுக்குத் தப்பினார். செக்கோஸ்லோவேகியாவுக்குச் சென்றிருந்தபோது, இவர் ஒரு மரப் பெட்டியைத் தயாரித்து, அதற்குள் உட்கார்ந்து கொண்டார். இப்பெட்டி ''ஸ்டாக்ஹோம் கண்காட்சி''க்குக் கொண்டு செல்லப்பட்டது. ஸ்வீடன் தலைநகருக்குப் பத்திரமாகப் போய்ச் சேர்ந்ததும், உள்ளே வைத்திருந்த ஒரு சிறு ரம்பத்தினால், பெட்டியை அறுத்துக்கொண்டு வெளியே தப்பினார். கிழக்கு ஜெர்மனியிலுள்ள அவருடைய உறவினர்களுக்குத் தொல்லை விளைக்கக்கூடும் என்பதால், இந்த இளைஞரின் பெயர் வெளியிடப் படவில்லை.

(யு. பி. ஐ.)

சுதந்திர உலகுக்குப்

## பார்சல்!

விருந்து பார்க்க ஆசை கொண்டான். முண்டியடித்துக் கொண்டு கூட்டத்தினுள் நுழைந்து காந்திஜி வரும் பாதையில் போய் நின்றான். தற்செயலாகப் பக்கத்தில் திரும்பினான்.

விநாயகராவ் அங்கே நின்று கொண்டிருந்தான்!

''அடடே! நீங்களும் இங்கு வந்து விட்டீர்களா?'' என்றான் ரங்கமணி வியப்புடன்.

''ஆமாம். இங்காவது பாபுஜியைப் பார்க்கலாமே என்று வந்தோம்'' என்றான் விநாயகராவ்.

''உங்கள் நண்பர் எங்கே வரவில்லையா?''

''வந்திருக்கிறான். சற்றுத் தள்ளி எங்காவது நிற்பான். நீங்கள் காந்திஜியைச் சந்திக்கவில்லையா?''

''அதற்குத்தான் அவசரமாகப் புறப்பட்டு வந்தேன். அதற்குள் காந்திஜி பிரார்த்தனைக் கூட்டத்துக்குப் புறப்பட்டு விட்டார்'' என்றான் ரங்கமணி வருத்தத்துடன்.

காந்திஜி அவசரமாக நடந்து வந்து கொண்டிருந்தார். வழக்கமாக வரும் நேரத்தை விட அன்று சற்றுக் காலதாமதமாகி விட்டதால் காந்திஜி வேகமாக நடக்க முயன்றார்.

''பாபுஜி இன்று நேரம் கழித்து வருகிறார் போலிருக்கிறது'' என்று விநாயகராவ் முணுமுணுத்தான்.

''உன்னைச் சந்திப்பதற்காகத்தான் காத்திருந்திருக்கிறார். அதனால்தான் இன்று அவருக்குக் கூட்டத்துக்கு நேரமாகிவிட்டது'' என்று தீக்ஷிதர் மெதுவாக ரங்கமணியிடம் சொன்னார்.

தன்னால் காந்திஜி நேரம் கழித்து வர நேரிட்டுவிட்டதே என்று எண்ணி அங்கலாய்த்தான், ரங்கமணி.

''நாளைக் காலையில் காந்திஜியைக் கட்டாயம் சந்தித்துவிட வேண்டும்'' என்றார் தீக்ஷிதர்.

அப்போது காந்திஜி ரங்கமணி நின்று கொண்டிருந்த இடத்தை நெருங்கி விட்டார். அவர் ரங்கமணியின் பக்கத்தில் வந்ததும் ரங்கமணி கைகூப்பி வணங்கினான். காந்திஜி புன்னகை தவழப் பதிலுக்கு வணங்கி விட்டு மேலே நடந்தார்.

பக்கத்தில் நின்ற விநாயகராவ் ஒரு அடி முன்னால் வந்து, காந்திஜியிடம், ''பாபுஜி, இன்று நேரமாகிவிட்டது போலிருக்கிறது'' என்று கூறிக் கொண்டே கைகூப்பி வணங்கினான்.

''ஆமாம், நேரமாகி விட்டது'' என்று கூறிக்கொண்டே அவனைக் கடந்து செல்ல முனைந்தார், காந்திஜி.

அதே சமயம் விநாயகராவ் யாரும் எதிர்பாராத காரியத்தைச் செய்து விட்டான்!

திடீரென்று மடியில் மறைத்து வைத்திருந்த கைத் துப்பாக்கியை எடுத்துக் காந்திஜியை மூன்று முறை சுட்டு விட்டான்.*

''ராம்...ராம்...'' என்று கூறிக் கொண்டே காந்திஜி கீழே சாய்ந்தார்.

''ஐயோ பாபுஜி...'' என்று அலறிக் கொண்டே கீழே சாய்ந்து கொண்டிருந்த காந்திஜியைத் தாங்கினான், ரங்கமணி.

காந்திஜியின் கண்கள் ஒரு கணம் ரங்கமணியைப் பார்த்தன. மறுகணம் மூடிக் கொண்டன. அவர் மார்பிலிருந்து இரத்தம் பொங்கி மண்ணில் பெருகியது. ரங்கமணியின் கண்ணீரும் அந்த இரத்தத்தோடு கலந்தது. அவன் பையிலிருந்த இயேசுநாதரின் சிலுவைப் பொம்மை நழுவித் தரையில் விழுந்தது. விழுந்த சிலுவையைக் காந்திஜியின் நெஞ்சிலிருந்து பொங்கிப் பெருகிய இரத்தம் மண்ணோடு சேர்த்து மூடி மறைத்து விட்டது.

புனித இரத்தத்துக்குள் சிலுவை மறைந்ததை உணராமலே ரங்கமணி அழுது கொண்டு நின்றான்.




''ஏலீ, ஏலீ, லமா சபக்தானி?''—
என் கடவுளே,
என் கடவுளே,
ஏன் என்னைக்
கைவிட்டீர்?

—பைபிள்

* காந்தியடிகளைக் கொலை செய்த நாதுராம் கோட்ஸே என்பவன் டில்லியில் விநாயகராவ் என்ற மாறு பெயரில் திரிந்தான். அவனுக்குத் துணையாக இருந்த ஆப்தே என்பவன், நாராயண ராவ் என்ற மாறு பெயரில் உலவினான்.

# மேரி பாப்பின்ஸ்

கிறிஸ்துமஸ் பரிசாகத் திரை உலக மந்திரவாதி என்று அழைக்கப்படும் வால்ட் டிஸ்னியின் சிரிப்பும், களிப்பும், பிரமிப்பும் நிறைந்ததோர் இனிமையான படத்தை ஆனந்த் தியேட்டரில் வெளியிட்டிருக்கிறார்கள். பிரபலமானதொரு கதை. 'மை ஃபேர் லேடி', 'ஸவுண்ட் ஆஃப் மியூஸிக்' போன்ற வெற்றிப் படங்களின் அடிச்சுவட்டில் தயாரிக்கப்பட்ட படம் மேரி பாப்பின்ஸ். ஆனால் அவைகளினின்றும் தனித்து நிற்கும் தகுதியுடையது. ஏனென்றால் இது



விந்தை மனிதர் வால்ட் டிஸ்னியின் தயாரிப்பு. இந்தக் கதையை நாடகமாக்கவும் டெலிவிஷனில் நடத்தவும் திரைப்படம் எடுக்கவும் பலர் முயன்றும் அவர்கள் யாருக்கும் உரிமையை வழங்காத இக்கதையின் ஆசிரியை இதை வால்ட் டிஸ்னிக்கு மட்டும் கொடுத்தார் என்றால் டிஸ்னியிடமும் அவர் தயாரிப்புகளிலும் அவருக்கிருந்த நம்பிக்கையைத்தான் காட்டுகிறது. ஆசிரியையின் நம்பிக்கை வீண் போகவில்லை. மகிழ்ச்சி நிறைந்த கதையமைப்பைக் கொண்ட மேரி பாப்பின்ஸ் படத்தைக் காணும்போது காண்பவரின் உள்ளங்கள் களிப்பில் துள்ளுகின்றன. அன்பு நிறைந்த, உற்சாகம் மிக்க 'நானி' (Nanny)யாக வந்து இனிமையான குரலில் இசைக்கும் ஜூலி ஆண்ட்ரூஸ் நம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விடுகிறார். அவரது பாதுகாப்பிலே வளரும் குழந்தை (நட்சத்திரங்)களான ஜேனும் மைக்கேலும்தான் எத்தனை அற்புதமாக நடித்திருக்கிறார்கள்?

கண் கவரும் வனப்பு மிக்க இங்கிலாந்தின் கிராமப்புறக் காட்சியிலே கனவுலக யாத்திரை செய்யும் கதாபாத்திரங்கள் 'கார்ட்டூன்' பாத்திரங்களோடு இணைந்து தோன்றும் அழகு அற்புதம். 'கார்ட்டூன்' காட்சிகளோடு நிஜக் காட்சிகளையும் இணைத்து எடுத்திருக்கும் புதுமையைக் கண்டு வியக்கிறோம். டிஸ்னியின் அற்புத ஆற்றலைக் கண்டு திகைக்கிறோம். அப்போதே "இந்த மேதையை ஆண்டவன் சிரஞ்சீவியாகப் படைத்திருக்கக் கூடாதா? திரை உலகில் இன்னும் எத்தனையோ அற்புதங்களை நாம் கண்டு களிக்கலாமே" என்ற ஏக்கமும் உண்டாகிறது.

ஆடல், பாடல், அதிசயம், மகிழ்ச்சி, வேடிக்கை இத்தனையும் நிறைந்த படம் மேரி பாப்பின்ஸ். கண்ணுக்கு இனிய வண்ணக் காட்சிகள், சிந்தையைக் குளிர்விக்கும் உல்லாசப் பாடல்கள் கொண்டது பாப்பின்ஸ். குடும்பத்தோடு, கண்டு களிக்கவேண்டிய படம்.

# கேசம் உதிருகிறதே என்ற கவலையா?



## இன்றே **ஸில்விக்ரின்** உபயோகிக்கத் தொடங்கி உங்கள் கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்

**இந்த அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்.**

கேச உதிர்வு. உச்சந்தலையிலே தினவு. நார்போல் வரண்ட உரோமம். உங்கள் கேசத்திற்கு உகந்த ஊட்டமில்லை என்பதற்கான அறிகுறிகள் இவை. ஊட்டமின்மைதான் இளமையிலேயே வழுக்கை விழக் காரணமாகிறது. அந்த ஊட்டமின்மைக்கு உரிய நிவாரணம் ஸில்விக்ரின்—கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

**ஸில்விக்ரின் எப்படி வேலை செய்கிறது.**

18 அமினோ-அமிலங்களை உங்கள் கேசத்திற்கு உணவாக அளிக்கிறது இயற்கை. இந்த அமினோ—அமிலங்கள் எல்லாமே அடர்வாக ஒன்று சேர்ந்த வடிவில் கிடைக்கச் செய்வது ஸில்விக்ரின் ஒன்றே. அது வேகமுடன் மயிர்க்கால்களை ஊடுருவி, ஊட்டமளித்து உரமேற்றி, பாங்கான கேச வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

**உபயோக விதிமுறைகள்:**

உங்கள் உச்சந்தலைமீது அன்றுடம் இரு நிமிட நேரம் ப்யூர் ஸில்விக்ரின் தேய்த்திடுங்கள். கேச நிலை அபிவிருத்தி அடையும் வரை உபயோகியுங்கள் ப்யூர் ஸில்விக்ரின். கேச நலம் மீண்டு விட்டதென்றால் அதன்பின் கேச நலனைக் காத்துக் கொள்ளத் துணை புரிவது ஸில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்-ப்யூர் ஸில்விக்ரின் அடங்கிய, எண்ணெய் அடிப்படை கொண்ட லோஷன்.

ஆல் அபௌட் ஹேர் (All About Hair) என்ற புத்தகத்தின் இலவசப் பிரதியைப் பெற, எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 727, பம்பாய்-1.




ஸில்விக்ரின் தயாரிப்புகள்—ஆடவர், பெண்டிர் யாவரும் உபயோகிக்கத் தக்கவை.

# ஸில்விக்ரின்

கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

LPE-Aiyars S. I TAM



மூன்றாவது பரிசு நாவல்

# மணக் கோலம்

பி.வி.ஆர்.

### அத்தியாயம் 15

மூன்றும் நாள் வழக்கம் போல் வேலைக்குச் சென்ற ஜானுவைக் காணோம். மணி ஏழு, எட்டு, ஒன்பது என்று ஓடிக்கொண்டேயிருந்தது... பாகீரதி அம்மாள், உள்ளுக்கும் வாசலுக்குமாக, மனம் பதைபதைக்க அலைந்து கொண்டேயிருந்தாள். பத்து மணிக்கு வீடு திரும்பிய சந்தானம் விஷயத்தைக் கேள்விப்பட்டதும் அடையாற்றுக்கு ஓடினான். ஜானு அன்று ஆபீசுக்கே வரவில்லை என்ற தகவலைக் கொடுத்தார் சிதம்பரம்.

ஜானு எங்கே?

இந்தக் கேள்விதான் எல்லாருடைய மனத்திலும் பயங்கரமாக எழுந்தது.

வீடு அல்லோலகல்லோலப்பட்டது. இரவெல்லாம் கதறி அழுத தாயாரை எப்படிச் சமாதானப்படுத்துவது என்று யாருக்கும் புரியவில்லை. தன் சோகத்தையும் புதைத்துவிட்டுச் சீதா என்னவெல்லாமோ சொல்லிப் பார்த்தாள். 'ஜானுவைப் பற்றி நாம் எதுக்கும் கவலையே பட வேண்டாம். அவள் கண்டிப்பாகத் திரும்பி வந்துவிடுவாள்' என்று கமலா தைரியமூட்டினாள்.

அதிகாலையில் சந்தானம் அடையாற்றுக்கு மறுபடியும் சென்று சிதம்பரத்தின் உதவியுடன் லட்சுமி அம்மாளைச் சந்தித்தான். அவனுக்கு ஜானு காணாமற் போனது ஆச்சரியமாக இருந்தது. ஆனால், அதே சமயத்தில், ராஜாவும் சென்னையில் இருக்கக் கூடும் என்ற எண்ணமும் எழவே, ''ராஜா ஜானுவைப் பார்த்திருப்பான். அவர்கள் இரண்டு பேரும் பட்டணத்திலேதான் இருக்க வேண்டும்'' என்று தனது அபிப்பிராயத்தைவெளியிட்டான்.

சுமார் எட்டு மணிக்குத் திரும்பி வந்த அவனிடம் பாகீரதி, ''என் பெண் உயிரோடு இருக்கிறாளோ என்னவோ சீக்கிரத்திலே போலீஸிலே அறிவித்துவிடு.....'' என்றாள். போலீசுக்குத் தெரிந்தால் பத்திரிகைகளில் விஷயம் அடிபடும் என்று கமலா அந்த யோசனையை எதிர்த்தாள். குடும்பத்தின் மானம் குலையாமல் இருக்க வேண்டும் என்று சீதா விரும்பினாள்.

யார் சொல்வதைக் கேட்பது என்று புரியாத சந்தானம், ''மாமி — நீங்க இதைப் பற்றி ஒரு கவலையும் படாதீர்கள்.... போலீஸ் தயவு இல்லாமலேயே ஜானுவைக் கண்டுபிடிக்கலாம்... நான் இப்போ வெளியே போய் விட்டு வருகிறேன்.....!'' என்று கூறிக் கிளம்பினான்.

சந்தானம் பாக்கிய நிலையத்தை அடைந்தபோது மணி ஒன்பது.

அவன் சொன்ன சமாசாரத்தைக் கேட்டதும், அகிலாவும் ரவியும் அயர்ந்து போனார்கள்.

''ராஜா சென்னையில்தான் நடமாடுகிறான் என்பது வெட்டவெளிச்சமாகத் தெரிகிறது'' என்ற அகிலா, ''இப்போதே நாம் நடவடிக்கை எடுத்துக்கொண்டால் இரண்டு பேரையும் இன்னிக்கு ராத்திரிக்குள்ளே பிடிச்சுடலாம்'' என்றாள்.

''பைத்தியம் மாதிரி உளறாதே, அகிலா.....'' என்று கூறிய சந்தானம் ஆழ்ந்த யோசனையிலே மூழ்கியவனைப்

போல் உட்கார்ந்திருந்த ரவியைப் பார்த்து ''நேற்றுக் காலையிலே வீட்டை விட்டுப் புறப்பட்ட ஜானு ஆபீஸை அடையவில்லே. அதாவது ஒன்பதரை அல்லது ஒன்பதே முக்காலிலிருந்து அவளே யாரும் பார்க்கவில்லே...ஒன்று அவள் ராஜா இருக்கும் இடத்தை அறிந்து கொண்டு அவனைச் சந்திக்கச் சென்றிருப்பாள்.... அல்லது அவன் அவளைச் சந்தித்து அழைத்துப் போய் இருப்பான்......'' என்று முடித்தான்.

''இரண்டாவது சொன்னியே அது பாஸிபிள்.... '' என்ற ரவி, ''இரண்டு பேரும் ஒருவரை ஒருவர் விரும்பு கிறார்கள்னு சொன்னே, இல்லே ?'' என்று கேட்டான்.

''ஆமாம்... ஆனால் ஜானுவுக்கு இப் போது அவனைப் பிடிக்கவில்லே என்று நினைக்கிறேன்.....''

''அப்படியானால் ஏன் அவளைக் காணோம்.....?'' என்றாள் அகிலா.

''அவன் பணத்தைத் திருடிவிட்டு ஓடியதால்தான் தன் அக்காவின் கலி யாணம் தடைப்பட்டுப் போய் விட்டது என்று ஜானு அவன் மீது ஆத்திரம் கொண்டிருக்கிறாள்.......''

''ஆனல், சந்தானம், ஜானு அவனே வெறுத்து ஒதுக்கிவிடவில்லேயே? ஏமாற் றம், ஆத்திரம் கோபம் எல்லாம் இருக்கலாம்..... ஆனல் அவன் மீது கொண்ட அன்போ அல்லது காதலோ குறையாமல் இருக்கலாமே ?'' என்றான் ரவி.

''உண்மை......''

''அப்படியானால், ராஜா அவளைச் சந்தித்து அழைத்துக் கொண்டுபோய் இருக்கலாம் அல்லவா?''

''ஒப்புக் கொள்கிறேன் '' என்றான் சந்தானம்.

''மறுபடியும் போலீஸிலே இந்த லேடஸ்டு டெவலப்மெண்டைச் சொல்லி வைப்போம்......!''



''நோ... நோ...!'' என்ற ரவி, ''அகிலா, நீ ரொம்ப அவசரப்படு கிறாய். இந்தப் போலீஸால் ராஜா வைக் கண்டுபிடிக்க முடியல்லே, இத்தனை நாளா.... இப்போ நாம் கம்ப்ளெய்ண்டு கொடுத்து அவர்கள் ஜானுவையும் அவனையும் எங்காவது தேடிப் பிடித்தார்களானால் என்ன நடக்கும் தெரியுமா?'' என்று கேட்டான்.

''தெரியாது!''

'' அதனால்தான் எளிசாச் சொல்லி விட்டாய்.... திருட்டுக்கு ஜானுவும் உடந்தை என்று அவனையும் காவலில் வைப்பார்கள். பாகீரதி மாமி அப்புறம் நம்மைப் பற்றிக் கேவலமாக நினைக்க மாட்டார்களா?''

''ரொம்ப கரெக்ட்!'' என்றான் சந்தானம்.

''அப்படி இரண்டு பேரும் சந்தித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நாம நினைக்கிறது சரியா இருந்தால், நிச்சயமா அவர்கள் தலைமறைவா இருந்து, கலியாணத்தையும் பண்ணிக் கொள்ளு வார்கள்.....!'' என்றாள் அகிலா.

'' அந்த எண்ணத்துடன் தான் ராஜாவே வந்திருக்க வேண்டும் !'' என்றான் சந்தானம்.

''ஜானு அவனைக் கலியாணம் பண்ணிக் கொள்வது நிச்சயம்னா,



அதிலே அவளுக்குப் பரிபூரண ஆசை இருக்குன்னு, நான் கம்ப்ளெயின்டையே வாபஸ் வாங்கி விடறேன்..... பாவம், அவள் கலியாணமானதும் ஆகாததுமா கணவனை ஜெயிலில் பார்க்க வேண் டாம்.....!'' என்றான் ரவி.

''அப்போ உன் பணம்?''—அகிலா.

''அதைப் பாகீரதியின் பெண் அநுபவிக்கிறாள் என்றால் எனக்கு லவலேசமும் வருத்தம் இருக்காது.''

சந்தானம் ரவியைப் பார்த்தான். ஒன்றரை லட்சத்துக்கு மேலாகப் பறி கொடுத்தவன் எவ்வளவு நிதானத் துடன் தன்னுடைய தியாக ஒளியைக் காட்டுகிறான்.

''ஜானு அவனை மணந்து கொள்ள ஆசைப்பட்டிருக்கலாம்.... ஆனா இந்த மோசடிக்குப் பிறகு அவள் மனசு கண் டிப்பா மாறியிருக்கும்....!'' என்றான் சந்தானம்.

அகிலா ஏளனமாகச் சிரித்தாள். ''ஒருத்தி உண்மையாகவே ஒருவனை விரும்பி விட்டாள் என்றால், அவ னுடைய மற்ற குணங்களைப் பற்றிச் சிந்திக்கவே மாட்டாள். அவன் கொலை காரனாக மாறினால்கூட, அவன் மீதுள்ள அன்பும் காதலும் அந்தப் பெண் ணுக்குக் குறையாது.... இது பெண் மனத்தின் பிடிவாத குணம்.... ஏன், ஒரு குறைபாடும்கூட.......!''

''எனக்கு இந்த மனோதத்துவம் தெரி யாது......!'' என்று சந்தானம் சிரித் தான். பிறகு, ''ரவி, முடிவாக என்ன சொல்லுகிறாய் ?'' என்று கேட்டான்.

''இரண்டு மூன்று நாட்களுக்குப் பேசாமல் இருப்போம்.... ஜானுவின் அம்மாவுக்கு வேண்டியபடி ஆறுதல் சொல்லு.... இதுக்கு இப்போ விளம்ப ரம் கொடுத்தால், பாவம், அவளுடைய பெற்ற மனசு இடிஞ்சு போய்விடும்... தன்னுடைய மற்ற ரெண்டு பெண் களுக்குக் கலியாணமே ஆகாதோ என்று அவள் மாய்ந்து போவாள்!'' என்று சொல்லிவிட்டு ரவி எழுந்தான்.

கூடவே எழுந்த சந்தானம்,''இரண்டு நாட்கள் முன்னாலே, அதாவது நீ வந்து விட்டுப் போன மறு நாள் ஜானு என் னிடம் என்ன கேட்டாள் தெரியுமா?'' என்று ஆரம்பித்தான்.

''என்ன?'

''ராஜா அகப்பட்டுக் கொண்டு, இழந்து போன பணம் திரும்பக் கிடைச்சால் ரவி சீதாவைக் கல் யாணம் செய்து கொள்ளுவானா என்று கேட்டாள் !''

''அப்படியா?'' என்று ஆச்சரியத் துடன் பார்த்த ரவி, ''நீ என்ன பதில் சொன்னாய்?'' என்று வினவினான்.

''என்ன பதிலைச் சொன்னால் அவ ளுக்குத் திருப்தி இருக்குமோ, எந்தப் பதில் உண்மையாகவும் இருக்குமோ, அதைச் சொன்னேன் !''

''அதாவது ?''

''நீ கண்டிப்பாய்ச் சீதாவுக்கு மாலை யிடுவாய் என்று......!''

''இப்போ எனக்கு எல்லாம் புரிய றது!'' என்றாள் அகிலா.

''என்ன?'' — என்றான் ரவி.

''ஜானுவே ராஜாவைப் பிடிக்கக் கிளம்பியிருக்கிறாள்.... அக்காவுக்காகப் போலீஸ் வேலையில் அவள் இறங்கி யிருக்கிறாள்!''

''பிதற்றாதே !'' என்ற ரவி, ''அப் படியானால், சந்தானம், நாம் இன்னும் ஒரு வாரத்துக்கு எந்தவித நடவடிக்கை யும் எடுக்கக் கூடாது..... இந்த ஒரு வாரத்துக்குள் ஜானு திரும்பி வராவிட் டால், போலீஸ் இருக்கவே இருக்கு!'' என்று முடித்தான். பிறகு, ''நீ அவள் கிட்டே நான் என்ன செய்வேன்னு சொன்னே பாரு, அதைத்தான் நானும் என் மனசிலே நெனைச்சுண்டிருந்தேன்!'' என்றான்.

'' எனக்கு உன்னைத் தெரியாதா, ரவி !'' என்று கூறிவிட்டுச் சந் தானம் திரும்பினான்.

**அ**வனுடைய வருகைக்காகத் துடிப் புடன் காத்திருந்த பாகீரதி, ''ஏதா வது தெரிந்ததா?'' என்று கேட்டாள்.

சந்தானம் நடந்ததையும், ரவியும் அவனும் பேசியதையும் விவரமாகக் கூறினான்.

''இப்போ போலீஸிலே புகார் செய்தால், நானைக்கு ராஜாவைப் பிடிக் கிறப்போ, ஜானுவையும் அவனுக்கு உடந்தைன்னு காவலிலே வைப்பார்கள் என்று ரவி அபிப்பிராயப்படுகிறான். எனக்கும் அவன் சொல்றது சரியாகப் படுகிறது.....''

''அதனாலே....?''

''ரெண்டு பேரும் ஒண்ணாக இருக் கிறபட்சத்திலே, நாம் கொஞ்ச நாளைக் குப் பேசாமல் இருக்கிறது நல்லது...ஒரு வாரத்திலே ஜானுவிடமிருந்து ஒரு தகவலாவது வராமல் இருக்காது...... இப்போ நாம அவசரப்பட்டு ஏதாவது செய்து அது விபரீதமாகப் போய்விட் டால் என்ன பண்ண முடியும்?''

பாகீரதியம்மாள் பயம் தொனிக்கக் கேட்டாள்:

''அதற்குள் அவன் அவளைக் கல் யாணம் செய்து கொண்டு விட்டால்? நாளைக்கு என் பெண் நடுத் தெருவில் நிற்பாளே?''



# புத்தாண்டில்

## விஜயா பாங்கின்

வாடிக்கைக்காரர்கள், பங்குதாரர்கள்

மற்றும் நண்பர்கள்

அனைவர்களுக்கும் இன்பமும், வளமும்

உண்டாக வேண்டும் என்று

**விஜயா பாங்கின்**

சேர்மன், நிர்வாகிகள்,

ஆபீஸர்கள், ஊழியர்கள் எல்லோரும்

நல் வாழ்த்து

தெரிவித்துக் கொள்கிறார்கள்.

**எம். சுந்தர் ராம் ஷெட்டி**

சேர்மன்

VB-32-MAC(B)

''வாஸ்தவம்தான் மாமி.... ஆனால் ரெண்டு பேரும் வயசு வந்தவர்கள்.... அவளைப் பலாத்காரம் செய்துதான் கலியாணம் செய்து கொண்டிருக்கிறான் என்று யாருமே சொல்ல முடியாதே.... பார்க்கப் போனால், ஜானுவுக்கும் அவனைக் கலியாணம் செய்து கொள்ள இஷ்டம் இருப்பது தெரிந்தது தானே...!''

''எனக்குத் தலை சுற்றுகிறது....!'' என்று முனகிய பாகீரதி, ''ஏன்தான் நான் இந்தப் பெண்களைப் பெற்று இப்படி அவதிப்படுகிறேனோ!'' என்று தன்னைத்தானே சபித்துக் கொண்டாள்.

அதன்பின் ஆரம்பித்த அவளுடைய விசும்பல் ஒலியைக் கேட்க மனம் வராமல், சந்தானம் தன் அறையைத் தேடிப் போனான்.

சரியாக ஒன்பதேமுக்கால் மணிக்குப் பஸ்ஸை விட்டிறங்கிய ஜானு, தெருவைக் கடந்து, மெயின் ரோட்டை அடைந்தாள். சற்றுத் தூரத்தில் இருந்த பிள்ளையார் கோயிலுக்குமுன் யாரோ தேங்காய் ஒன்றை உடைக்க, பல சிறுவர்கள் பாய்ந்தோடி வந்தார்கள், சிதர்களைப் பொறுக்க.

மெயின் ரோட்டில் வேகமாக வந்து கொண்டிருந்த ஒரு காருக்கு வழி விட்டபின், ஜானு மெதுவாக அந்தத் தெருவைக் கடந்தாள். திடீரென்று ஒரு கார் பின்னாலிருந்து வந்து, அவளுக்கு வெகு அருகில் நின்றது.

ஒருகணம் திடுக்கிட்டுப் போய் நின்ற ஜானுவின் காதுகளில், ''ஜானு, சீக்கிரம் வண்டியில் ஏறு!'' என்ற வார்த்தைகள் விழுந்தன. கண் இமைக்கும் நேரத்தில் குரல் யாருடையது என்பது அவளுக்குத் தெரிந்து விடவே, அவள் பயமும் மகிழ்ச்சியும் உள்ளத்தில் பொங்கப் பார்த்தாள்.

''கம் ஆன், க்விக், ஜானு!'' என்றான் ராஜா மீண்டும்.

அவன் திறந்த கதவைப் பிடித்துக்கொண்டே, ஜானு அடுத்தகணம் காரில் ஏறி, அவன் அருகில் உட்கார்ந்து கொண்டாள். சீதாவுக்கு ரவி மாலையிடும் காட்சி அவள் கண்முன் அப்போது எழுந்தது. அந்த மணக் கோலத்தை மனத்தினுள் நிறைத்து அநுபவிக்கவொட்டாமல், ராஜா —

''சௌக்கியமாக இருக்கிறாயா ஜானு?'' என்று கேட்டுக் கொண்டே வண்டியை வேகமாகச் செலுத்தலானான்.

வண்டியின் விரைவையும், அது செல்லும் திசையையும் கண்டு ஜானுவின் மனம் பதறியது.




''இந்தக் காலண்டரில் மார்ச் மாதமும், செப்டம்பர் மாதமும் மட்டும்தானே இருக்கு: ஏன்?''

''தெரியாதா? அது டுடோரியல் காலேஜ் வெளியிட்டுள்ள காலண்டர்!''

---

''ராஜா.... இப்போ எங்கே போகிறோம்?'' என்ற அவள் நாக் குழறியது.

அவன் பதில் சொல்லாமல், தனக்கு முன் நீண்டு ஓடும் பாதையையே பார்த்துக் கொண்டு வண்டியை ஓட்டினான். கிண்டி என்ஜினீயரிங் காலேஜ், கவர்னர் மாளிகை எல்லாவற்றையும் தாண்டி ஓடிய வண்டி கடைசியில், நெடுஞ்சாலையை அடைந்து இடதுபுறமாகத் திரும்பி, தாம்பரம் திசையில் விரைந்தது.

அவள் கேட்ட கேள்விக்கு எந்தப் பதிலையும் சொல்லாத ராஜா, தாம்பரத்தைக் கடந்ததும், சாலையில் ஆள் நடமாட்டம் இல்லாததைக் கண்டு, வண்டியின் வேகத்தைக் குறைத்தான். ஜானுவின் முகத்தில் பிரதிபலித்த பயத்தையும் பீதியையும் உணர்ந்து கொண்டே பேசினான்:

''ஜானு! இரவும் பகலும் உன்னைப் பத்தியே நெனைச்சு நெனைச்சு, என்ன வந்தாலும் வரட்டும் என்றுதான் இன்னிக்கு மெட்ராஸ் வந்தேன்.... இனி மேல் எனக்குக் கவலை இல்லை..... நீ என்னுடன் இருக்கிறாய்.....!''

''எங்கே போகிறோம்.....?''

''உலகம் நீயும் நானும் நினைக்கிறபடி சின்னது இல்லை.... ரொம்பப் பெரிசு.... நம் வாழ்க்கையை இனிமேல் எங்காவது ஆரம்பிக்கலாம்.....''

''நான் கதவைத் திறந்து கொண்டு குதித்து விடுவேன்..... !''

''நான் உன் அருகே இருக்கிறவரையில் அந்த எண்ணம் உனக்கு வராது என்று எனக்குத் தெரியும்!''

''உங்களைப் போலீஸார் தேடுகிறார்கள்.... லட்சத்து முப்பதாயிரம் ரூபாயைத் திருடியிருக்கிறதாக.....'' அவளால் மேலே பேச முடியவில்லை.

''நீயும் நானும் சௌகரியமாக வாழ இது யதேஷ்டம்.... வடக்கே போவோம்.... உன்னை நான் கல்யாணம் பண்ணிக் கொண்டாகி விட்டது என்று தெரிந்தால் ரவி மேற்கொண்டு ஏதும் செய்ய யத்தனிக்க மாட்டான். ஏன், போலீஸ் கம்ப்ளெயின்டையே வாபஸ் வாங்கி விடுவான்....''

''என்ன தைரியம்!''

''அது ஒன்றுதான் எனக்கு இப்போ இருக்கிறது.... அது இருப்பதற்கும் நீதான் காரணம்.... என்னிக்கு நான் உன்னை முதன் முதலாகப் பார்த்தேனோ, அன்னிக்கே நான் இந்தப் பிளானைப் போட்டு விட்டேன்.....!''

''இப்போ எனக்கு இஷ்டமில்லை என்றால்......?''

''வண்டியில் பெட்ரோல் நிறைய இருக்கு, ஜானு.... கையிலே வத்திப் பெட்டியையும் வச்சிருக்கேன்.... நீ இல்லாமற் போனால் எனக்கு வாழ்க்கையில் எந்தவிதமான ரசனையும் கிடையாது..... அப்புறம் நான் உயிரோடு இருப்பானேன்....? அதே சமயத்தில் எனக்கு வாழ்வு இல்லாமல் செய்கிற நீயும் இருப்பானேன்......!''

அவனுடைய நிதானமான பேச்சைக் கேட்டபோது அவளுடைய உடல் நடுங்கியது. செங்கற்பட்டைத் தாண்டியதும் அவள் சொன்னாள்: ''உங்களால் இரண்டு குடும்பங்கள் நசித்து விட்டன..... ரவியை ஏழையாக அடித்து விட்டீர்கள். சீதாவுக்குக் கல்யாணம் ஆகாமல் போய் விட்டது...!''

''ரவி ஒரு முட்டாள்..... அப்பா உயிரோடு இருக்கிறப்போ பணத்தை அலட்சியம் செய்தான்..... இப்போ அவனுக்கு அதன் தேவை தெரிகிறது!''

''என் அக்காவின் ஜன்மமும் பாழாகி விட்டது......!''

''கல்யாணமானதும் நானே பணம் தருகிறேன். நீயே அனுப்பு...!''

''திருட்டுப் பணத்திலேயா என் அக்கா வாழ வேண்டும்?''

''கோதண்டராமன் பணமே திருட்டுப் பணம்தான்!'' என்று சிரித்தான்.

**ப**தினொன்றரை மணிக்குக் கார் மதுராந்தகத்தை அடைந்தது.

''ஜானு! பசிக்கிறதா?'' என்று கேட்டான் ராஜா.

''இல்லை......!''

''திண்டிவனத்திலே ஏதாவது சாப்பிடலாம்.....!''

திடீரென்று அவள் கேட்டாள்:

''போலீஸைக் கண்டு உங்களுக்குப் பயமில்லையா?''

''இல்லையென்று யார் சொன்னார்கள்.....? ஆனால் என்னை யார் என்று அவர்களுக்குத் தெரியாது.... அடையாளங்கள் ஏதும் போலீஸாரிடம் இல்லை.... ஏன், ஒரு போட்டோகூட அவர்களிடம் கிடையாதே.... இரண்டு மாசமா பிடிக்காத போலீஸ் என்னை மறந்து போயாச்சுன்னுகூடத் தோணுறது.....!''

''நான் ஞாபகப்படுத்தினால்...?''

ராஜா கலகலவென்று சிரித்தான்.

''ஜானு! உன் மனசை நான் அறிந்து கொண்டவன். என் மீது நான் செய்த காரியத்துக்காக, உனக்கு ஆத்திரமும் கோபமும் இருக்கு....ஆனா வெறுப்பு கிடையாது.... நான் திருந்த வேண்டுமே என்கிற ஓர் ஆதங்கமும் இருக்கு......!''

''நீங்கள்தான் திருந்தவில்லையே ? அன்னிக்குச் சத்தியம் பண்ணிக் கொடுத்தீர்கள் !''

''ஆமாம்.... ஆனா அதை நான் மீறவில்லை.... இதெல்லாம் அதுக்கு முன்னாலே நடத்தினது.....!''

பயமும் ஆச்சரியமும் தோன்ற ஜானு அவனைப் பார்த்தாள் :

''போகட்டும். பணத்தை ரவியிடம் கொடுத்து அவனிடம் மன்னிப்புக் கேளுங்கோ.... நல்லவர் என்கிற பெயராவது நிலைக்கட்டும்.... சீதாவுக்கும் ஒரு வாழ்வு கிட்டும்.....!''

''முடியாது ஜானு.... நான் எடுத்தது எடுத்ததுதான்.... லட்சம் ரூபாயைப் பாங்கியில் போட்டுக் காலை நீட்டி உட்கார்ந்தால்கூட ஆறாயிரம் ரூபாய் வட்டி வரும்..... மாசம், ஐந்நூறு ரூபாய்.... அந்தச் சுகத்தை நீயும் நானும் சேர்ந்து அனுபவிக்க வேண்டும்!''

**தி**ண்டிவனத்தை அடையும்போது மணி பன்னிரண்டு.

''எனக்குப் பசியில்லை!'' என்றாள் ஜானு. அவளுக்குத் தலை கனத்தது. அவளை அழைத்துச் செல்லவே ராஜா சென்னைக்கு வந்திருக்கிறான் என்பதை அறிந்ததிலிருந்து அவனிடம் எந்தவித மான பயமும் தோன்றவில்லை. இருந்தாலும் எப்படித் தப்பித்துக் கொள்வது என்று மனம் சிந்திக்கலாயிற்று.

விழுப்புரத்தை அடைந்தபோது அவளுக்கு உண்மையாகவே பசித்தது. இருவரும் ஒரு ஹோட்டலில் இட்டிலியும் காப்பியும் சாப்பிட்டார்கள்.

அவன் மீண்டும் காரில் உட்கார்ந்த போது, ''எங்கேதான் போகிறோம், அதையாவது சொல்ல மாட்டீர்களா?'' என்று கெஞ்சும் குரலில் கேட்டாள்.

''போகப் போகத் தெரியும்....'' என்றான் ராஜா. பிறகு, ''நீ என் மனைவி என்கிற ஸ்தானத்தை அடையும் வரை, உன்னை என்னால் நம்ப முடியாது, ஜானு !'' என்றான்.

''அப்போ?'' — ஜானுவின் உடலும் மனமும் துடித்தன.

உளுந்தூர்ப் பேட்டையில் ராஜா காருக்குப் பெட்ரோல் போட்டுக் கொண்டான்.

ஜானு நடுங்கும் குரலில், ''சமயம் கிடைச்சா நான் போலீஸிலே சொல்லி விடுவேன்...என்னைப் பலாத்காரமா..'' என்று மேலே பேச முடியாமல் நிறுத்தினாள்.

ராஜா சிரித்தான். ''அந்தச் சமயமும் உனக்குக் கிடைக்காது. கிடைத்தாலும், என் மேலே இருக்கிற அன்பு உன் நாக்கைக் கட்டிப் போடும்...!''

நீண்ட நேரத்துக்கு ஜானு தன்னுள் சிந்தித்துக் கொண்டேயிருந்தாள்.... முதன் முதலில் தோன்றிய பயம் இப்போது அகன்று விட்டது. ராஜா சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் உண்மையாக ஒலித்தது. அவளால் ராஜாவை மறக்க முடியாது. அவன் பிறரை வஞ்சித்திருக்கிறான் ; ஏமாற்றியிருக்கிறான்; பிறர் சொத்தைத் திருடியிருக்கிறான்..... இதெல்லாம் உண்மைதான்...... அதே மாதிரி உண்மையானதுதான் அவள் அவன் மீதுகொண்டுள்ள அன்பும். அவள் அவனை வெறுக்கிறாளா? கேள்வி ஆயிரமாயிரம் தடவை எழுந்தாலும் பதில் ஒன்றேதான் மனத்தில் எழுந்தது. அவன் மீதுள்ள அன்புக்கு எதிராக, அவன் செய்த காரியங்கள் தோற்றுவித்த கோபம், ஆத்திரம், வருத்தம் எல்லாம் தூசி போலத் தோன்றின. தன்னால், ராஜா இல்லாமல் வாழ முடியாது என்று அவள் மனமார நினைத்தாள்.

ஆனால் ஒரு கயவனை, ஒரு திருடனையா அவள் மணம் செய்து கொண்டு வாழ வேண்டும்? அம்மாவும் அக்காவும் என்ன நினைப்பார்கள்? சந்தானம் வருத்தப்படுவானே? தன் பிள்ளை திருந்தி நல்லவனாக வாழ வேண்டுமானால், அவனுக்குச் சிறைவாசம் ஒன்றுதான் வழி என்று தீர்மானமாக நம்பும் லட்சுமி அம்மாள் என்ன நினைப்பாள்? ராஜா என்ற மோசடிக்காரன் மனைவிதான் ஜானு என்று நான்கு பேர்கள் சொல்லிச் சிரிக்கும்போது, அவள் எப்படிச் சமூகத்தில் மானத்துடன் தலை காட்ட முடியும்?

ராஜா கல்யாணம் செய்து கொண்டால் அவளுக்காக மாறி விடுவான் என்று சொன்னாலும் எப்படி நம்ப முடியும்? இப்போது அவன் மீது அவளுக்கு இருக்கும் காதலும் அன்பும் குறையாது என்பது என்ன நிச்சயம்?

திடீரென்று ஜானுவின் மனக் கண் முன் சீதா நின்றாள்! மூன்றாவது தடவையாக அவளுடைய திருமணம் தடைப்படுகிறது. இதற்குக் காரணம் இந்த ராஜா ! ராஜா பணத்துடன் ஓடியிராவிட்டால், ரவி அவளுக்குக் கணவனாகியிருப்பான்! சீதாவின் எதிர்காலத்தையே குலைத்த ராஜாவை அவள் இப்போது மணம் செய்து கொண்டால், அவளும் அவனுடைய களவுக்கு உடந்தைதான். சீதாவுக்கு வாழ்வளிக்க வேண்டும்! எப்படி? ராஜா கைதாக வேண்டும்! இதற்கு அவள்தான் ஒரு யோசனை செய்து நடத்த வேண்டும்.

இரவு கண்டிப்பாக இருவரும் ஒரு ஹோட்டலில் தங்குவார்கள். அந்தச் சந்தர்ப்பத்தை அவள் பயன்படுத்திக் கொள்ளுவாள்! ராஜா அவளுடைய காதலன்தான். அவனை நினைத்து அவள் ஏங்கியதெல்லாம் உண்மைதான் ! ஆனால் அவர்கள் இருவருடைய வாழ்வினால் மட்டுமே, அவளுக்கு நிம்மதியும் சந்தோஷமும் கிடைத்துவிடாது! ஜானுவைத் தன் உயிருக்கும் மேலாக மதித்த அக்காவும் வாழ வேண்டும்! அக்காவின் கபிட்சமான இல்லறம் இப்போது ஜானுவின் கையில் இருக்கிறது !



''யோசிக்காதே அண்ணே! இதுக்கு முன் இவரு நீயணைக்கும் படையிலே வண்டி ஓட்டிக் கிட்டிருந்தாரு!''

ராஜா கைதானால், கண்டிப்பாகச் சிறையில் தள்ளப்படுவான். அவன் வெளியே வர, ஒரு வருஷமோ, இரண்டு வருஷங்களோ ஆகலாம். அதன்பின், அவன் அக்கினியில் இடப்பெற்ற தங்கத்தைப் போலாகி விடுவான்!... அதன்பின் அவன் இசைந்தால் இருவரும் கல்யாணம் செய்து கொள்ளலாம்.....! அவனுடைய சிறைவாசம் அவனை மாற்றுமற் போனால், ஜானு என்றென்றும் கன்னியாகவே இருந்து விடுவாள்!

மாலைச்சூரியனின் பொற்கிரணங்கள் கண்களுக்கு ரம்மியமாகத் தோன்றின. இன்னும் சிறிது நேரத்தில் அஸ்தமித்து விடும். அந்த அஸ்தமனம், யாருக்கு? ராஜாவுக்கா, ஜானுவுக்கா, இல்லை, சீதா—ரவிக்கா?

இதை ஜானு ஒருத்தியால்தான் தீர்மானிக்க முடியும்!

''அதோ மலைக்கோட்டை தெரிகிறது!'' என்றாள் அவள் திடீரென்று.

''ஆமாம்.... திருச்சிராப்பள்ளி!''

''இரவு எங்கே தங்கப் போகிறோம்?''

''எங்கேயும் இல்லை.....!''

''நாள் முழுதும் கார் ஓட்டினால் உடம்புக்கு என்னாகிறது......?''

''என் உடம்பின் மேல் எனக்கு நம்பிக்கை இருக்கிறது, ஜானு!''

''அப்போ?''

''உன் மீது இல்லைன்னு அர்த்தம்!'' ராஜா சிரித்தான்.

''எனக்குப் பசிக்கிறது.....!''

''பின் ஸீட்டில் வாழைப் பழமும், ரொட்டியும் இருக்கு.... ரொட்டி பழசானாலும் நன்னாயிருக்கும்....!''

''மாற்றுப் புடவைகூட இல்லை!''

''டிக்கியில் ரெண்டு பட்டுப்புடவையும்.....ரெண்டு ரவிக்கையும் இருக்கு.''

''ஓ, எல்லாம் திட்டம் போட்டுத் தான் வந்திருக்கிறீர்கள், இல்லையா?''

''ஆமாம்... அதைத் தகர்க்க நீ உன் மனசிலே திட்டம் போட்டால், காவேரியில் இந்த வண்டி மூழ்கிவிடும்!''

''என்னை இறக்கிவிடுங்கள்!''

''அதைச் செய்யவா நான் உயிரையே பணயம் வைச்சு மெட்ராசுக்கு வந்தேன்?''

''எனக்கு உங்களைக் கல்யாணம் செய்து கொள்ள விருப்பமில்லை....!''

''கரூரிலிருந்து காங்கேயம் போறபோது ஞாபகப்படுத்து. சாலையிலே ஆள் நடமாட்டம் இராது....!''

''என்ன செய்வீர்கள்?''

''ரவியின் பணம் யாருக்கும் இல்லாமல் போய் விடும்.''

''எதற்கும் துணிந்து விட்டீர்கள்!''

''தலைக்கு மேலே போயாகிவிட்டது... திருட்டு தற்கொலையிலே முடியட்டும்!''

ஒரு கணம் ராஜாவின் பிரேதம் அவள் கண் முன் எழுந்தது. உடலின் நடுக்கத்தில் அவள் கேட்டாள்:

''என்னையும் கொன்று விடுவீர்கள், இல்லையா!''

''காலையில் அப்படித்தான் நினைச்சிருந்தேன்.... ஆனா இப்போ மனசு மாறி விட்டது!''

இரவு ஒன்பது மணிக்கு வண்டி கரூரை அடைந்தது. காருக்குப் பெட்ரோல் போட்ட அவன், அவளுடைய தாகத்துக்குச் சோடா வாங்கிக் கொடுத்தான்.

காங்கேயம் செல்லும் பாதை பொட்டல் வெளியின் நடுவே, வளைந்து சென்றது. இருளின் பயங்கரத்தில் ஜானு கண்களை மூடிக் கொண்டாள். வானத்தில் சிதறிக் கிடந்த நட்சத்திரங்களைப் பார்க்கக்கூட ஜானுவுக்குத் தெளிவு வரவில்லை. கார், பெட்ரோல் நெருப்புப் பெட்டி எல்லாம் பூதாகாரமாக மனக்கண்முன் தோன்றி அவளை வதைத்தன.

ஜானு திமிறுகிறாள். அவளை வண்டியிலிருந்து தள்ளிவிட்டு ராஜா வண்டியைச் செலுத்துகிறான். அதன்பின் கொஞ்ச தூரத்தில் கார் நிற்கிறது. தான் தள்ளப்பட்ட இடத்திலிருந்து ஜானு, இருட்டில் ராஜாவையும் காரையும் கண்களால் தேடுகிறாள். நிசப்தமான மை இருளில், திடீரென்று அக்னியின் சிவப்புத் தெரிகிறது. வானத்தை நோக்கிப் பாயும் அக்கினி ஒரு மண்டலமாகத் தோன்றுகிறது. காரை நெருங்கவும் அவளுக்குக் கால் எழுவதில்லை... கார், ராஜா, பட்டுப் புடவைகள், ரவியின் பணம் எல்லாம் தீக்கிரையாகி விட்டன. நள்ளிரவில் பொட்டல் காட்டில், எல்லாம் இழந்து பரிதவிக்கிறாள் ஜானு.

''ரொம்ப அசதியா யிருந்தால் பின் ஸீட்டிலே படுத்துக் கொள் ஜானு!''

குரல் கேட்டுத் திடீரென்று நரம்புகள் சிலிர்க்க ஜானு கண் திறந்தாள்.

''இப்போ என்ன மணி....?''

''பதினொன்று......!''

''எங்கே இருக்கிறோம்....?''

''இன்னும் கால்மணி நேரத்திலே காங்கேயம்.....''

ஜானு வெலவெலத்துப் போனாள்.

திடீரென்று ராஜா காரை நிறுத்திவிட்டுக் கேட்டான்:



# நியாய விலையில் தரத்தில் தன்னிகரற்ற ஸ்டீல்

நீங்கள் ஸ்டீலை டாடா ஸ்டாக்யார்டிலிருந்து வாங்கும் பொழுது, தரத்தில் உயரியதும் உங்கள் தேவைக்குகந்ததுமானதை நியாய விலையில் பெறுவீர்கள். அதன் தரம், உற்பத்தியின் ஒவ்வொரு கட்டத்திலும், விஞ்ஞான முறைப்படி நிபுணர்களால் கட்டுப்படுத்தப்படுகிறது.

தவிர, இத்துடன் உங்களுக்கு அதிகப்படியாகக் கிடைக்கிறது ...நீங்கள் ஸ்டீலை உபயோகிக்கும்போது ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்க்க இலவச ஆலோசனை, உதவி முதலியவை.

டாடா ஸ்டீலின் பதினொரு கிளைகளின் தொடர்ந்த அமைப்பு, வாடிக்கைக்காரர்களுக்கான கடமையை பாரபட்சமில்லாமலும் பெருந்தன்மையுடனும் நிறைவேற்ற உதவுகிறது. 60 ஆண்டுகளாக கம்பெனி கடைபிடித்து வரும் குறிக்கோள்களில் இதுவும் ஒன்று.

***உங்களுக்குத் தேவையான ஸ்டீலைப் பெறுவதற்கு உங்கள் அருகில் இருக்கும் எங்கள் கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள்.***

## தி டாடா அயர்ன் அண்டு ஸ்டீல் கம்பெனி லிமிடெட்.

**தலைமை விற்பனை அலுவலகம் : 23B, நேதாஜி சுபாஷ் ரோடு, கல்கத்தா-1**

**கிளைகள் :**

இம்பீரியல் ரெஸ்டாரண்ட்,
(3வது மாடி) ரிலீஃப் ரோடு,
**அஹமதாபாத்**

20-J, மஹாத்மா காந்தி ரோடு,
**பெங்களூர்**

நியூ இந்தியா அஷ்யூரன்ஸ்கட்டிடம்,
மஹாத்மா காந்தி ரோடு, ஃபோர்ட்,
**பம்பாய்**

மினர்வா கட்டிடம்,
மஹாத்மா காந்தி ரோடு,
**எர்ணாகுளம்**

கிராண்ட் டிரங் ரோடு,
ஸிவில் லயன்ஸ்,
**ஜலந்தர் நகரம்**

நவரோஜ் கட்டிடம்,
மஹாத்மா காந்தி ரோடு,
**கான்பூர்**

108, ஆர்மீனியன் தெரு,
**சென்னை**

கமர்ஷியல் ரோடு,
**நாகபுரி**

ஷியாம் பவன்,
15/1, அஸாப அலி ரோடு,
**புது டில்லி**

126, சரோஜினி தேவி ரோடு,
**செகந்திராபாத்**

ஆந்திரா பாங்க் கட்டிடம்,
ராஜா ரங்கய்யப்பாராவ் தெரு,
**விஜயவாடா**

TN-2961 RI

'' உனக்குச் சம்மதமில்லையானால், இறங்கிக் கொள்..... என்னைப் பற்றிக் கவலைப்படாதே ! ஒன்று நீயும் நானும் சேர்ந்து வாழணும்..... அல்லது....'' ராஜா பெருமூச்செறிந்தான். பிறகு மெதுவாக, ''நீ இல்லாவிட்டால் — வாழ வேண்டும் என்ற ஆசையே எனக்குக் கிடையாது.....!'' என்றான்.

''என்ன செய்வீர்கள் ?''

''அது உனக்கு அனாவசியம்..... ரவியின் பணத்தை இப்போதே கொடுத்து விடுகிறேன்..... ஆனால், ராஜாவை நீ உன் வாழ்நாளில் இனி பார்க்கவே முடியாது..... ராஜா யாருக்காக இது வரையில் வாழ நினைத்திருக்கிறானோ அவள் தனக்கு இல்லை என்ற நிலை வந்து விட்டால் உலகத்தை விட்டே மறையவும் தயங்கமாட்டான்......!''

அவனுடைய வார்த்தைகள், அந்த நிம்மதியான இரவு வேளையில் அவளுக்குப் பயமுறுத்தும் வார்த்தைகளாக ஒலிக்கவில்லை. அவனுடைய ஒவ்வொரு வார்த்தையையும் ஜானு பரிபூரணமாக நம்பினாள். ''வண்டியை 'ஸ்டார்ட்டு' செய்யுங்கள் !'' என்றாள்.

ஜானு இல்லாவிட்டால் ராஜா உயிரோடு இருக்க மாட்டான்! ஜானு அவனுக்காக வாழ்ந்தால், சீதாவுக்கு ஏது வாழ்வு ? ஏன் இப்படி மூன்றுபேர்களுடைய விதிகள் ஒன்றையொன்று பின்னிக் கொண்டிருக்கின்றன? அக்காவின் நற்கதிதான் முக்கியம் என்றும் ராஜா எப்படியோ ஒழியட்டும் என்றும் ஏன் அவள் மனத்தில் வைராக்கியம் உதிக்கவில்லை ? அவளுடைய உள்ளம் அவனை விரும்புவதுதான் அதற்குக் காரணமா ? அப்படியானால், அவள் தன் விருப்பத்தையே மட்டும் கவனித்தால் சுயநலக்காரியாகி விடுவாளே ?

குடும்பத்தின் மானத்தையே காப்பாற்றி, வறுமையின் துயரத்தைக் களைந்து, தன்னைத் தானே வருத்திக் கொண்டு, அம்மாவின் கண்ணீரைத் துடைத்து, தங்கைகளின் க்ஷேமத்தையே பெரிதாக நினைத்து உழைத்த சீதாவுக்கு ஜானு செய்யும் கடமை என்ன?

ராஜாவைக் கல்யாணம் செய்து கொண்டு, அவன் அழைத்துச் செல்லுகிற இடத்தில் தலை மறைவாக வாழ்நாள் முழுவதையும் கழிப்பதுதானா ?... இந்தச் சுயநலத்தால் அவளுக்கு என்ன இன்பம் கிடைக்கும்? ராஜா திருடிய பணத்தை அநுபவிக்கும்போதெல்லாம் ரவியின் நினைவும், சீதாவின் நினைவும் வருமே. அப்போது ஜானு எப்படி நிம்மதியாக இருப்பாள் ?

கல்யாணம் நடப்பதற்கு முன்னால் ஜானு ராஜாவைப் போலீஸ்வசம் ஒப்படைக்க முயன்றால்....?

அப்போது நடக்கக்கூடிய விபரீதம் !

எவன் ஒருவன் மட்டுமே அவளுடைய மனத்தில் இடம் பெற்றிருக்கிறானோ, அவன் அவளுடைய கண் முன்னாலேயே சாம்பராகி விடுவான்!

ராஜாவின் உயிரைப் பணயமாக வைத்தால் சீதாவுக்கு வாழ்வு உண்டு. சீதாவின் வாழ்வைப் பணயமாக வைத்தால் அவன் வாழ்வான்! ராஜா காப்பாற்றப்படுவான் !

சீதாவும் வாழ்ந்து ராஜாவின் ஆசையும் நிறைவேற வேண்டுமானால், ஜானு என்ன செய்ய வேண்டும் ?

என்ன செய்ய வேண்டும்?

சீதா வாழ வேண்டும்! ராஜா தன்னைத் தானே அழித்துக் கொள்ளாமல் இருக்க வேண்டும்! இதற்கு ஜானு என்ன செய்ய வேண்டும் ?

இரவெல்லாம் தவித்த ஜானுவுக்குக் கோயமுத்தூர் தாண்டியது கூடத் தெரியவில்லை.

அவளை எங்கே அழைத்துக் கொண்டு போகிறான் ராஜா? அவர்களுடைய வாழ்க்கையின் ஆரம்பத்துக்கா? அல்லது முடிவுக்கா ?

ஜானு கண்களைத் துடைத்துக் கொண்டே கேட்டாள்: ''இப்போ நாம் எங்கே இருக்கிறோம் ?''

''வாளையார் காட்டில்?....''

''மணி என்னவாகிறது.....?''

''இரண்டரை....''

''எங்கே போகிறோம்......?''

''விடிந்தால் தெரியும்!''

அவள் விடிவை எதிர்நோக்கினாள்.

யாருக்கு விடியப் போகிறது?

அவளுக்கா ? அப்படியானால், அந்த விடிவில், சீதாவின் அஸ்தமனம் இருக்கும். சீதாவுக்கு விடிவு என்றால் ?

கண்டிப்பாக அது ஜானுவின் அஸ்தமனமாக இருக்காது. சீதாவின் விடிவு, அவளுடைய மனத்தின் பூரண நிலவு.

என்ன செய்ய வேண்டும் என்ற கேள்விக்குத் திடீரென்று ஒரு பதில் கிடைத்தது.

எல்லோருடைய வாழ்வும் அந்த ஒரு பதிலில் அடங்கியிருப்பதாக ஜானு எண்ணினாள். அதே சமயத்தில் அவளையும் அறியாமல் சந்தானத்தின் உருவம் கண்முன் தோன்றி மறைந்தது! அவன் ஒருவனால்தான் அவளைப் புரிந்து கொள்ள முடியும்!

**(அடுத்த இதழில் முடியும்)**

# வாழ்த்துக்கள் வாழ்க!

'பாபு'



புத்தாண்டு பிறக்க இன்னும் ஒரு வாரம் இருந்தது.

நாங்கள் எவ்வளவு வாழ்த்துக்கள் அனுப்புவது என்று இன்னும் முடிவு செய்யவில்லை. சிக்கனத்தைக் கருதித் தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தோம்.

''நாம் இந்த வருஷம் ஒருவருக்குமே வாழ்த்துச் செய்தி அனுப்பவில்லை என்று வைத்துக் கொள்வோம். ஆனால் நமக்கு வாழ்த்துக்கள் நிறைய வந்து சேர்ந்து விடுமே. அப்பொழுது என்னசெய்வது?''

''நன்றிக் கார்டுகள் போட்டுவிடலாமே!'' என்றாள் என் மனைவி விமலா.

''அதெல்லாம் சரிப்படாது. ஒன்று செய்யலாம். இந்த வருஷம் கால் வாசிப்பேருக்கு அனுப்ப வேண்டாம். அடுத்த வருஷம் இன்னொரு கால்வாசி. இப்படி நாலு வருஷங்களில் நிறுத்தி விடலாம். ஐந்தாவது வருஷம் ஒன்றும் நாம் அனுப்ப வேண்டாம். ஆறாவது வருஷம் நமக்கும் யாரும் அனுப்பமாட்டார்கள். சரி, அந்த லிஸ்டையும் பென்சிலையும் கொண்டு வா'' என்றேன்.

லிஸ்டும் பென்சிலும் வந்தன. ஆள் குறைப்பு ஆரம்பமாயிற்று.

முதல் பெயர் மிஸ்டர் அண்ட் மிஸஸ் பாலு.

''இது வேண்டுமா?''

''ஐயையோ! மிஸஸ் பாலு என் டியரஸ்ட் பிரண்ட் ஆச்சே!''

''நீதான் அவளை மூணு வருஷமாப் பார்க்கல்லியே!''

''பார்க்காதவங்களுக்குத் தானே கிரீட்டிங்ஸ் அனுப்பணும்.''

''சரி, அடுத்துப் பார்ப்போம். 'மிஸ் விஜயா — இது எப்படி?''

''இருக்கட்டும். அவ என்னோட க்ளாஸ்மேட்!''

''அவதான் உனக்குப் பர்த் டே கிரீட்டிங்ஸ் அனுப்பல்லியே!'' பென்சிலால் விஜயாவின் மேல் ஒரு கோடு போட்டேன்.

''அப்பமன்னு லில்லி, ராதா இந்த ரெண்டு பேரையும் சேருங்க. அவங்க பர்த் டே பிரஸன்ட் கொண்டு வந்து கொடுத்தாங்களே!''

இரண்டு பெயர்களும் லிஸ்டில் சேர்ந்தன. ஒன்று லாபம். இரண்டு நஷ்டம்.

அடுத்தது மிஸ்டர் நாயர். என் கையிலிருந்த பென்சிலைப் பிடுங்கி நாயர் மேல் கோடு கிழித்தாள் விமலா.

''நாயர் என்னோட டிபன்ஸ் டிபார்ட்மெண்டிலே பத்து வருஷம் வேலை பார்த்தவராச்சே ...?''

''எல்லாம் அப்படித்தான். பின்னே எப்படி 'எகானமைஸ்' பண்றதாம்?'' என்று ஒரே போடாகப் போட்டு விட்டாள் என் மனைவி.

அடுத்த பெயர் கணேஷ். அவளுடைய ஒன்றுவிட்ட சகோதரன்.

''கணேஷ் வேண்டாமே!''

''ஏன் வேண்டாம்? போன பொங்கலுக்குப் பம்பாயிலிருந்து எனக்கு ஒரு டிஷ்யூ சாரி வாங்கிண்டு வந்தானே, அதுக்காகவா? வேணும்னு அதற்கு அடுத்த பேரை அடிச்சுடுங்க!''

அடுத்த பெயர் கீர்த்திவாசன். என் மாமா பிள்ளை. நல்ல பையன். என்ன செய்வது? அடித்துவிட்டேன் அவனை. எப்படியாவது மிச்சம் பிடிக்கணுமே.

''ஆமாம்; இந்த வசுமதி எதுக்கு? அவதான் உன்னை எதிர்த்து லேடீஸ் கிளப் எலக்ஷன்லே நின்னாளே?''

''ஆனால் தோற்று விட்டாளே. இப்ப அனுப்பல்லேன்னு, கர்வம் பிடிச்சவள்னு எனை நினைச்சுப்பா..''

''சரி, உன் இஷ்டம்.''

''அடாடா மறந்தே போச்சே. லேடீஸ் கிளப் பிரஸிடெண்ட் சரஸ்வதியைச் சேர்க்கணும். அப்படியே பக்கத்தாத்து கமலா மாலா ஸிஸ்டர்ஸையும் சேர்த்துக்குங்கோ. பத்தியானக் கச்சேரிக்கு அவாளுக்கு இந்த வருஷம் சீஸனிலே சான்ஸ் கிடைச்சிருக்கு. அவளுக்கு எக்ஸ்ட்ரா நடிகை பிரேமாவை நன்னாத் தெரியுமாம். அவளுக்கும் ஒண்ணு அனுப்பலாம். நாளைக்கு அறிமுகமாறச்சே பேச்சு ஆரம்பிக்கச் சௌகரியமாயிருக்கும். அப்புறம் ஜெயாவை மறந்துவிடக்கூடாது.''

இப்படிப் பட்டியல் குறைவதற்குப் பதில் 47லிருந்து 53 ஆக உயர்ந்தது. அடுத்த வருஷம் இது அறுபத்தெட்டாகவும் ஆகலாம்!

வாழ்த்துக்கள்: வாழ்க! வளர்க!



# மோகத்தைக் கொன்றுவிடு

ஜி. கே. பொன்னம்மாள்

ஹம்சாநந்தி ராகத் தில்லானாவைச் சுழன்று சுழன்று வெகு அழகாக ஆடிய தமது சிஷ்யப் பெண் பானுவை ஒரு முறை பெருமிதத்துடன் நிமிர்ந்து பார்த்தார் கந்தப்ப நட்டுவனார். 'பரவாயில்லே; இன்னும் பதினைந்து நாட்களில் அரங்கேற்றத்தைத் தைரியமாகவே நடத்திவிடலாம். பானு நடனத்தில் நன்றாகத் தேர்ச்சி அடைந்து விட்டாள்' என்று நினைத்துக் கொண்டே பக்கத்தில் இருந்த சிறு கல் உரலில் வெற்றிலையையும், பாக்கையும் போட்டு இடிக்க ஆரம்பித்தார். பானு வியர்வையைத் துடைத்துக் கொண்டே ஆசிரியர் என்ன சொல்லப் போகிறாரோ என்பதை எதிர்பார்த்தவாறு நின்றாள்.

''இந்த மாசம் பதினைந்தாம் தேதி அரங்கேற்றத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டேன். நேற்றுகூடக் கோயிலில் தர்மகர்த்தாவிடம் இது விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தேன். முதன் முதலாக இறைவன் முன் ஆடுவதே விசேஷம். உனக்கு அதிர்ஷ்டமும் இறைவன் அருளும் இருக்கும் பட்சத்தில் முன்னுக்கு வந்துவிடலாம்'' என்று பேசிக் கொண்டே போன ஆசிரியரை நன்றியுடனும் பக்திப் பெருக்குடனும்பார்த்துக்கொண்டேயிருந்தாள் பானு. அவள் கண்களில் நன்றி உணர்ச்சியால் நீர் நிறைந்திருந்தது.

''ஐயா, வாசலிலே கார் வந்து நிற்கிறது. யாரோ வருகிறாங்க'' என்றாள் பானு.

''இந்த வீட்டுக்குக் காரிலே யார் வரப் போறாங்க, அம்மா? எல்லாம் பக்கத்து வீட்டுக்காக இருக்கும். நீ வேலையைக் கவனி. தட்டிக் கும்பிட்டு ஆட்டத்தை முடி'' என்று பேசிக் கொண்டே தட்டுக் குச்சியைக் கையில் எடுத்தவர் மலைத்துப் போய் விட்டார்.

தடதடவென்று ஒருவர் ஜரிகை வேஷ்டியும் சில்க்சட்டையும் அணிந்த பணக்காரத் தோற்றத்துடன் உள்ளே வந்து, ''நமஸ்காரம் ஸ்ரீகந்தப்ப பிள்ளை. உங்களைப் பார்க்கத்தான் அவசரமாக வந்தேன்'' என்றபடியே நட்டுவனார் பக்கத்தில் உட்கார்ந்தார்.



''விஷயம் முக்கியமானது. நான் சினிமா நடிகை இந்திராணி தேவியின் மானேஜர். அவங்க இந்த மாசம் பத்தாம் தேதி சிங்கப்பூரில் நாட்டியக் கச்சேரிக்குக் கிளம்பறாங்க. எல்லா ஏற்பாடும் செய்தாகி விட்டது. சமயத்திலே

எங்க வாத்தியார் ஆடியபாதம் காலே வாரி விட்டுட்டாரு. அம்மாவுக்கும் அவருக்கும் பண விஷயத்திலோ வேறு என்ன விஷயத்திலோ அபிப்பிராய பேதம் ஏற்பட்டு விட்டது. ஆடியபாதம் கச்சேரிக்கு வரமாட்டேன்னு சொல்லிட்டாரு. அம்மாவுக்குக் கோபம் வந்துடிச்சு. உடனே, 'வண்டியை எடுத்துப் போய் நம்ம நட்டுவனார் கந்தப்ப பிள்ளையைக் கூட்டி வா'ன்னுங்க. இதோ நான் வந்திருக்கிறேன். முதலிலே இந்த முன் பணத்தைப் பிடியுங்க. பின்னடி பேசலாம்'' என்று தோல் பையிலிருந்து ஐந்து நூறு ரூபாய் நோட்டுகளை நட்டுவனார் கையில் திணித்தார் காரில் வந்த கனவான்.

கந்தப்பப் பிள்ளைக்கு ஒருகணம் ஒன்றுமே தோன்றவில்லை. அவர் ஆட்டத்தில் எவ்வளவோ வல்லவராக இருந்தும், பணம் சம்பாதிக்கும் விஷயத்தில் அசடாகவே இருந்தார். இத்தனை கலையை வைத்துக் கொண்டு மனிதர் நேர்மை, நியாயம் என்று பேசிப் பிழைக்கத் தெரியாமல் தவிக்கிறார் என்ற அபிப்பிராயம்தான் அவரைப் பற்றி வெளியே நிலவி வந்தது. கலையைப் பணமாக்குவதும் ஒரு கலைதானே ? அது பிள்ளைக்குத் தெரியவில்லை.

''என்னுங்க இது. இப்படித் திடீர்னு கூப்பிடறீங்களே! இந்தக் காலத்துச் சினிமா நாட்டிய சம்பிரதாயமெல்லாம் எனக்குத் தெரியாது. தவிரவும் நீங்க என்னைக் கூப்பிடறது தெரிஞ்சா ஆடியபாதம் வருத்தப்படுவான். எனக்கோ வயசாச்சு. இந்தச் சினிமா — நடிகை விவகாரமெல்லாம் நமக்கு ஒத்து வராது. ஏதோ நாலு பசங்களுக்குப் பாடத்தைச் சொல்லி நான் பிழைச்சுக்கிட்டிருக்கேன். என்னை அப்படியே விட்டு விடுங்க'' என்று குழைந்தார் பிள்ளை.

''இதோ பாருங்க, பிள்ளைவாள்! அநேகமாக மகான்களும், மேதைகளும் குடத்து விளக்காகத்தான் இருப்பாங்க. வைரம் குப்பையிலே கிடந்தாலும் அது வைரம் தான். எங்க எஜமானியம்மாவுக்கு இது தெரிஞ்சிருக்கு. அவுங்க சிங்கப்பூரிலே சுத்தமான பரதம்தான் ஆடப் போறாங்க. நீங்க வந்து ஒரு நாலு நாள் ஒத்திகை பார்த்தா எல்லாம் சரியாகிவிடும். மாட்டேன்னு சொல்லாதீங்க. தவிரவும் இது விஷயமாக ஆடியபாதம் வருத்தப்படுவதற்கே இடமில்லே. அவருதான் வரமுடியாதுன்னு சொல்லிட்டாரே. ஆகையினாலே ஒண்ணும் யோசனை பண்ணாமே பணத்தை எடுத்து வையுங்க'' என்று மானேஜர் படபடப்புடன் பேசினார்.

''இல்லிங்க. இந்த மாசம் பதினைந்தாம் தேதி இந்தச் சிஷ்யப் பெண்ணு பானுவின் அரங்கேற்றம் நடந்தாகணும். ரொம்பச் சிரமப்பட்டு அரங்கேற்றத்துக்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செஞ்சிருக்காங்க. இந்தப் பொண்ணு ரொம்ப ஏழை. கோயில்லேதான் அரங்கேற்றம். அந்த நடராஜன் கண் திறந்து இந்தப் பொண்ணு கஷ்டம் நீங்கணும்'' என்று பேசியவரை இடைமறித்தார்.

''இதோ, பாருங்க! நீங்க இப்ப சொன்னபடி அந்த நடராஜர் கண்ணைத் திறந்துட்டார்னே வைச்சுக்குங்க. ஏன்னு, நம்ப அம்மாவே இன்னொரு தேதியிலே இந்தக் குழந்தை



அரங்கேற்றத்தை நடத்தி வைப்பாங்க. அவங்களே நடனத்துக்குத் தலைமை வகிப்பாங்க. எந்தச் சபாவிலேயும் கச்சேரிக்குச் சான்ஸ் வாங்கித் தர அம்மாவாலே முடியும். அப்போ நான் வரட்டுமா வாத்தியாரையா? ஒத்திகை எப்போ வைக்கலாம்? வண்டி அனுப்பறேன். சாயங்காலம் ஆறு மணிக்கு'' என்று எழுந்து விட்டார் சாமர்த்தியசாலியான மானேஜர்.

மானேஜர் பேச்சிலும் அவர் கொடுத்த பணத்திலும் கந்தப்ப பிள்ளையும் சற்று மயங்கி விட்டார் என்றுதான் சொல்லவேண்டும். அவர் பதில் சொல்லுமுன்பே தெருவில் வண்டி கிளம்பும் சத்தம் கேட்டது. நடந்த நிகழ்ச்சிகள் ஒன்றும் கனவல்ல என்பதற்கு ஆதாரமாக நூறு ரூபாய் நோட்டுகள் அவர் கையில் இருந்தன.

ஒரு டின் சிகரட்டையும் காலி செய்துவிட்டு அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தார் பிரபல டான்ஸ் டைரக்டர் ஆடியபாதம். அவர் மனம் அப்படிக் குமும்பிக் கிடந்தது. 'தன்னை விட்டால் இந்திராணி தேவிக்கு வேறு யாரும் நட்டுவாங்கம் பண்ண முடியாது' என்ற நம்பிக்கையில்தான் அவர் அவளிடம் அதிகப் பணம் கேட்டிருந்தார். பலன், இந்திராணி தேவி அவரது கோரிக்கையை மறுத்து விட்டதோடல்லாமல் வேறு வாத்தியாரை அழைத்துப் போகிறேன் என்றும் சொல்லி விட்டாள். அந்த வேறு வாத்தியார் யாராக இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார் ஆடியபாதம்.

எதற்கும் சற்று வெளியே போனால் விஷயம் தெரியும் என்ற எண்ணத்துடன் முகத்தைக் கழுவி உடை மாற்றிக் கொண்டு எதிரே இருந்த ஹோட்டல் பக்கம் நடந்தார் ஆடியபாதம்.

''சார்! நமஸ்காரம். என்ன வீட்டுப் பக்கமே வரல்லே? வீட்டிலே ராவும்பகலுமா ஒத்திகை நடக்குதே. இப்போகூட ஒத்திகை நடந்துகிட்டிருக்கு. டிபனுக்குக் கோதுமை அல்வாவும், மசாலா தோசையும் வாங்கிக்கிட்டுப் போறேன்'' என்று அடுக்கினார் ஹோட்டலில் அவரைச் சந்தித்த இந்திராணி தேவி வீட்டுச் சமையற்காரச்சாம்பு. ஆடியபாதத்துக்கு ஒரு வகையில் எரிச்சலாக இருந்தாலும் இன்னொரு விதத்தில் விஷயங்களைத் தெரிந்து கொள்ள ஓர் ஆள் கிடைத்ததே என்ற மகிழ்ச்சியும் ஏற்பட்டது.

''இந்தாப்பா, சாம்பு! நாம்ப காப்பி சாப்பிடலாம். வா. சாப்பிட்டுக் கொண்டே பேசுவோம். இந்த டிபன் தூக்கை இப்படி வை. டிபன் சாப்பிட்டுவிட்டு எடுத்துக் கொள்ளலாம்'' என்று சாம்புவிடமிருந்த ஸ்வர்சில்வர் தூக்கைப் பலவந்தமாக வாங்கிக் கௌண்டருக்கு அருகே வைத்துவிட்டு ஒரு மேஜையின் முன்னால் அமர்ந்தார். இப்படிப் பிரபல நடன டைரக்டருக்குச் சமமாக அமர்ந்து டிபன் சாப்பிடுவது சாம்புவுக்குக் கொஞ்சம் சங்கடமாகத்தான் இருந்தது.

சாம்புவிடமிருந்து சகல விஷயங்களையும் கறந்து கொண்டார் ஆடியபாதம். கந்தப்ப நட்டுவனாருக்கு இப்போது இந்திராணியின் வீட்டில் நடக்கும் ராஜோபசாரங்களைக் கேட்கக் கேட்க அவரது வயிறு பற்றி எரிந்தது. மனத்தில் ஒரு திட்டம் தீட்டிக் கொண்ட ஆடியபாதம் ''சாம்பு! இந்திராணி அம்மா வீட்டு மிருதங்கம் சந்திரனை நம்மகிட்ட அனுப்பி வையுங்க'' என்றார்.

அவன்தான் அந்த நாட்டியக் குழுவிலேயே அவரிடம் பயபக்தி வைத்திருந்தவன்!

ஓட்டு வீட்டின் முன் வந்து நின்ற கப்பல் போன்ற காரிலிருந்து சற்று நிமிர்ந்த பார்வையுடன் இறங்கினார் கந்தப்ப நட்டுவனார். இப்படி ஓர் அதிர்ஷ்டம் தம்மைத் தேடி வரும் என்று அவர் கனவிலும் நினைத்ததே இல்லை. இந்த ஒரு வாரத்தில் அவர் உடல் கூடச் சற்றுத் தேறியிருப்பதாகத் தோன்றியது. நடிகையின் வீட்டில் நிமிஷத்துக்கு நிமிஷம், பழ ரசம், பால் என்று ஒத்திகைக்கு நடுவே கொண்டு வந்து உபசரிப்பார்கள். 'சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டும்' என்று முதல் நாள் நடிகை சொல்லிவிட்டதை வேதவாக்காக எடுத்துக் கொண்டு சமையற்காரனும் மானேஜரும் ஒத்திகை முடிந்ததும் அவரைச் சாப்பாட்டுக்கு அழைத்து விடுவார்கள். சாப்பாடு என்றால் சாதாரணச் சாப்பாடா? தயிரைக் குழப்பி ஆவக்காய் ஊறுகாயுடன் சாப்பிடும்போதும் கோவா மாம்பழத்தை வெள்ளித் தட்டிலிருந்து எடுத்துத் தின்னும் போதும், வெள்ளி வெற்றிலைத் தட்டிலிருந்து வாசனைப் புகையிலையையும் பொடி செய்த வாசனைப் பாக்கையும் சேர்த்து வெற்றிலை போடும் போதும் எப்படித்தானிருந்தது? வீட்டில் அவரது வயதான தமக்கை வற்றல் குழம்பு சோறு போடுவதையும் கிருஷ்ணர் படம் போட்ட பெருங்காய டப்பாவிலிருந்து பழைய புகையிலையைத் தாம் தேடி எடுப்பதையும் நினைத்துக் கொள்ளுவார். இவ்வளவு மட்டுமல்லாமல் நடிகை வைட்டமின் மாத்திரைகளையும், டானிக்கையும் வேறு அவருக்கு வாங்கிக் கொடுத்திருந்தாள்.

கொஞ்சம் வருஷங்களுக்கு முன்பே இப்படி ஒரு நல்ல இடத்தில் புகுந்திருந்தால் இந்நேரம் கார், பங்களா என்று வாழ்ந்திருக்கலாமே! 'இப்போ கந்தப்ப நட்டுவனார் என்றால் யாருக்குத் தெரியும்? இந்தச் சிங்கப்பூர் பிரயாணத்தில் பத்திரிகையில் தம்மை விளம்பரப் படுத்தவேண்டும் என்றும் அதற்காக நாலைக்குப் போட்டோ எடுக்க வேண்டும் என்றும் மானேஜர் சொல்லியிருக்கிறாரே. இந்த வயதில் இது வரையிலும், எந்தப் பத்திரிகையில் யார் தம்மை இப்படி விளம்பரப்படுத்தியிருக்கிறார்கள்? எல்லாம் இருக்க வேண்டிய இடத்தில் இருந்தால் தான் மதிப்பு கிடைக்கும். எல்லாம் சரிதான்..... ஆனால்....சிங்கப்பூர் பிரயாணத்தினால் இரண்டு காரியங்கள் நடைபெறும். ஒன்று பானுவின் அரங்கேற்றம். இரண்டாவது தினமும் காலையில் குளித்தவுடன் நடராஜர் கோயிலை வலம் வந்து வணங்குவது. அப்படியெல்லாம் பார்த்தால் முடியுமா? இத்தனை காலமும் வாழ்க்கையில் முன்னுக்கு வராமல் கோயிலைச் சுற்றிக் கொண்டுதானே இருந்தோம்? கோயிலும் கடவுளும் மனத்தில்

தானே இருக்கிறார்கள்? காலையில் குளித்து விட்டு நடராஜனை நினைத்துக் கொண்டால் போயிற்று? என்று சமாதானங்கள் சொல் லிக் கொண்டார் கந்தப்ப பிள்ளை.

நடிகை இந்திராணி தேவி தான் சிங்கப் பூருக்குப் போவதைப் பற்றியும், அங்கு நடக்கவிருக்கும் கலை நிகழ்ச்சிகளைப் பற்றி யும் பத்திரிகைக்காரர்களுக்குப் பேட்டி அளித்துவிட்டுக் களைப்புடன் தன் குளுகுளு அறைக்குள் நுழைந்து, கட்டிலில் சாய்ந்தாள். காலையில் நடன ஒத்திகையும், பிற்பகல் படப்பிடிப்பும், இரவு எட்டு மணிக்கு மேல் பத்திரிகைக்காரர்கள் தொல்லையுமாக மிகக் களைத்து விட்டிருந்தாள். வேலைக்காரி கட்டி லின் பக்கத்தில் உட்கார்ந்து மெதுவாக எஜமானியின் கால்களைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தாள். கண்களை மூடியபடி சிந்தனையில் மூழ்கியிருந்தாள் இந்திராணி தேவி. மெதுவாகக் கதவு தட்டப்படும் ஓசை வந்தது.

''வரலாமுங்களா?'' என்று வெளியே இருந்து குரல் தந்தான் மிருதங்கம் சந்திரன்.

'இப்போ எதற்கு வருகிறான் இந்தச் சந்திரன்?' என்று மனத்தில் அலுத்துக் கொண்டே, ''வா, வா'' என்றபடி மேஜையின்மேலிருந்த மாதுளம் பழ ரசத்தை எடுத்துப் பருகினாள் இந்திராணி தேவி. மெதுவாகக் கதவைத் திறந்து கொண்டு அசட் டுச் சிரிப்புடன் உள்ளே நுழைந்தான் சந்திரன்.

''என்ன வேண்டும்?'' என்று முகக் குறிப் பால் வினவினாள் நடிகை.

''ஒன்றுமில்லே. ஒரு சமாசாரம். நம்ம வாத்தியார் — கந்தப்ப நட்டுவனாரைப் பற்றி யது. சொல்ல வேண்டாம் என்றுதான் நினைத் தேன். சொல்லாமல் இருக்கவும் முடியல்லே. அவரைக் கடல் தாண்டி, தூரப் பயணம் கூட்டிப் போவது அத்தனை உசிதமாக எனக் குத் தோன்றவில்லே. அவருக்கு இதய வியாதி. சில சமயம் ஏதாவது பேசிவிட்டு மனிதர் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு தவிக்கிறார். நேற்று ஒத்திகையிலே கூட இப்படித் தவித் தார். ஆனால் அதை நீங்கள் கவனிக்கவில்லே. உங்களைப் பார்த்ததும் மேல் துண்டால் முகத்து வியர்வையைத் துடைத்துக் கொண்டு சிரித்துச் சமாளித்து விட்டார். இந்த வயசிலும் பணத்தாசை. வியாதியை மறைத்துக் கொண்டு 'வெளியூருக்கு வரேன்' என்கிறார். எங்கள் தெரு டாக்டரிடம் தான் அவர் வைத்தியம் செய்து கொள் கிறார். இதய வியாதி எப்போ என்ன ஆகும் என்று சொல்ல முடியாது. நமக்கோ சிங்கப் பூரில் இருபது கச்சேரிகள் இருக்கின்றன. எனக்கு மனசிலே பட்டதைச் சொன்னேன். பிறகு உங்கள் இஷ்டம்'' என்று இழுத்தான்.

இந்திராணி தேவி ஒரு கணம் யோசித்து விட்டு, ''நீங்கள் சொல்வதும் யோசிக்க வேண்டிய விஷயம்தான். ஆனால் இப்ப என்ன செய்யலாம்? மறுபடியும் ஆடிய பாதம் வருவாரா? அவரை எப்படிக் கூப் பிடுவது? பேசாமல் நம்ப டாக்டரைக் கூப்பிட்டு, கந்தப்பப்பிள்ளையைப் பரிசோதனை செய்யச் சொல்லி விட்டு நல்ல மருந்துகளை வாங்கிக் கொடுத்து, கடவுள் மேல் பாரத் தைப் போட்டு விட்டு அழைத்துப் போக லாம்'' என்றாள்.

''அம்மா! இந்த விஷயத்துக்கெல்லாம் கடவுளைத் துணைக்குக் கூப்பிடக் கூடாது. தெரியாம நடக்கும் நிகழ்ச்சிகளுக்குக் கடவுள் கைகொடுப்பார். தெரிந்து கொண்டே நாம் செய்யும் தவறுக்குக் கடவுளைத் துணைக்குக் கூப்பிடுவது சரியா? ஆடியபாதம் பிள்ளையை மறுபடியும் சேர்த்துக் கொண்டு வருவது என் பொறுப்பு. நீங்கள் அவருக்குப் பணம் அதிகம் கொடுத்தாலும் சரி, கொடுக்கா விட்டாலும் சரி, அவர் காலில் விழுந்தா வது நான் அழைத்து வந்து விடுகிறேன். உங்களிடம் இத்தனை காலம் பழகிப் பணி புரிந்ததற்கு நான் இதைக்கூடச் செய்யா விட்டால் நன்றி கெட்டவனாவேன்'' என்று குழைந்தான் சந்திரன்.

''சரி. எப்படியோ ஆடிய பாதத்தை வரவழைத்து விடுங்கள். டிரைவரை விட்டுக் கந்தப்ப நட்டுவனாரிடம் 'ஒத்திகைக்கு வர வேண்டாம்' என்றும் சொல்லி விடுங்கள்'' என்றாள் இந்திராணி.

மிருதங்கம் சந்திரன் சீட்டி அடித்துக் கொண்டு மாடிப் படிகளில் இறங்கினான்.

சிங்கப்பூர் விமான நிலையத்தில் நடிகை இந்திரா தேவியை வரவேற்கத் திரளாக ரசி கப் பெருமக்கள் கூடியிருந்தார்கள். எல்லோ ருடைய கண்களும் நடிகையையே சுற்றிச் சுற்றி வந்தன. சிரித்த முகத்துடன் விமானப் படிக்கட்டுகளில் நின்றவாறே கண்ணிலிருந்த கறுப்புக் கண்ணாடியைக் கழற்றிவிட்டு ரசிகர்களுக்கு அழகாகக் கரம் குவித்து வணக்கம் செலுத்தினாள் நடிகை. 'கிளிக், கிளிக்' என்று பத்திரிகைக்காரர்களும் புகைப் படம் எடுப்பவர்களும் இந்திராணி தேவியைப் பல கோணங்களில் படம் பிடித்துக் கொண் டார்கள். தம் திட்டத்தில் வெற்றி கண்ட ஆடியபாதம் கூடியவரையில் நடிகையின் பக்கத்திலேயே நின்று கொண்டார்.

---

**பேய் செய்த உதவி!**

இங்கிலாந்தில் ஒரு வீட்டுக்காரர் தன் வீடு பேயடைந்த வீடு என்பதை நிரூபித்து, அதற்காக வீட்டு வரிச்சலுகை பெற்றிருக்கிறாராம், நகரசபை யிடமிருந்து!



'பா.பு' 'காரனெட்'

---

கடல் கரை ஓரமாக இருந்த அந்தப் பெரிய ஹோட்டலில் அறை ஜன்னலருகே நின்று பொங்கும் அலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார் ஆடியபாதம். சில்லென்று கடல் காற்று வீசுவதும் காலையில் திருப்தியாகச் சாப்பிட்ட காப்பி பலகாரங்களும் அவருக்கு வெகு இதமாக இருந்தன. வெள்ளை உடை அணிந்த சீருக்கார வேலையாட்கள் ஹோட்டலுக்குக் குறுக்கும் நெடுக்குமாக நடந்து பணி புரிந்து கொண்டிருந்தார்கள். பளிச்சென்ற மெத்தை விரிப்புகள், சோபா செட்டுகள், கட்டிலுக்குப் பக்கத்தில் டெலிபோன், ரேடியோ என்று சகல வசதிகளும் இருந்தன அந்த அறையில்.

ஒரு மணி நேரமாக ஷவரின் கீழ் நின்று குளித்துவிட்டு, ரொட்டி, பழ வகைகள், முட்டை என்று காலைப் பலகாரத்தையும் ஒரு கை பார்த்துவிட்டு, உண்ட மயக்கத்துடன் சோபாவில் அமர்ந்த சந்திரன் திடீரென எதையோ நினைத்துக் கொண்டு "இன்னிக்குப் பேப்பரிலே அம்மாவுக்கு விமான நிலையத்தில் தந்த வரவேற்புப் படம் வந்திருக்குமே. வாங்கிட்டு வரச் சொல்லுகிறேன்" என்று அழைப்பு மணியை அடித்து வேலையாளிடம் — அவன் பேசும் மொழி தெரியாததனால் கையாலும் கண்ணாலும் அபிநயம் பிடித்து ஒருவாறாகப் பத்திரிகைகள் வேண்டும் என்பதை உணர்த்தினான். வேலையாள் மறுகணம் அன்றையப் பத்திரிகைகளை மேஜையின் மேல் போட்டான். எல்லாப் பத்திரிகைகளிலும் நடிகையின் படம் வந்திருந்தது. சிலவற்றில்தான் ஆடியபாதத்தின் முகமும் தெரிந்தது. மிகக் கவனமாகத் தம் படம் வந்திருந்த பத்திரிகைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார் ஆடியபாதம்.

"சார்! ஒரு சமாசாரம். இரண்டு கச்சேரிகள் முடிந்ததும் நாம்ப ஊரைச் சுத்திப் பார்க்கணும். கடைக்குப் போய்ச் சில சாமான்கள் வாங்கணும். ஒரு டிரான்ஸிஸ்டர், இரண்டு கடிகாரங்கள், ஒரு காமிரா எல்லாம் வாங்கணும் சார். இதுக்கெல்லாம் அம்மாகிட்டேயிருந்து கச்சேரிப் பணத்தை வாங்கிக்குடுத்திடுங்க சார்" என்றான் சந்திரன்.

ஆடியபாதம் பத்திரிகையிலேயே லயித்திருந்தார். ஒரு போட்டோவில் இந்திராணி தேவியின் மிக அருகே ஆடியபாதம் நின்றிருந்தார். ஆனால் முகத்துக்கெதிரே யாரோ ஒரு வழுக்கைத் தலை ஆசாமி படம் பிடிக்கும் சமயம் தலையை நீட்டி விட்டார். அப்படித் தம்மை மறைத்த அந்த ஆசாமியின் கழுத்தைத் திருகிவிட வேண்டும் போல் இருந்தது ஆடியபாதத்துக்கு. சலிப்புடன் அந்தப் பத்திரிகையைக் கீழே போட்டுவிட்டு சோபாவில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டார். அவருக்கு மார்பில் லேசாக வலி எடுப்பதுபோல் தோன்றியது. வியர்வை எடுத்து சில்க் சட்டை நனைய ஆரம்பித்தது. மின்சார விசிறி நின்றுவிட்டதா என்று மேலே பார்த்தார். விசிறி சுழன்று கொண்டுதான் இருந்தது. ஆடியபாதத்துக்கு உடம்பை என்னவோ சங்கடம் செய்தது. தலையைச் சுற்றுவது போலும் தோன்றியது.

"ஏன் சார் பதிலே காணோம்?" என்று கேட்டுக் கொண்டே திரும்பினான் சந்திரன்.

மார்பை அழுத்திப் பிடித்துக்கொண்டு "தண்ணி, தண்ணி" என்றார் ஆடியபாதம். திடுக்கிட்டுப் போன சந்திரன் பதற்றத்துடன் விரைந்து சென்று மண் கூஜாவிலிருந்து ஒரு கிளாஸில் தண்ணீரை எடுத்து வந்தான். வந்தவன் அப்படியே மலைத்து நின்று விட்டான். ஆடியபாதம் மேல் விட்டத்தைப் பார்த்தபடி அசையாமல் படுத்திருந்தார். அவர் கை சோபாவுக்குக் கீழே தொங்கிக் கொண்டிருந்தது. "சார் சார்" என்று உலுக்கினான் சந்திரன். பேச்சு மூச்சு இல்லை. ஆடியபாதத்தின் உடல் சில்லென்றிருந்தது. நடிகையின் அறைக்கு ஆடியபாதத்தின் நிலையைப் பற்றிப் பதற்றத்துடன் போன் செய்தான் சந்திரன்.

டாக்டர் வந்து பார்த்துவிட்டு மாரடைப்பினால் ஆடியபாதம் காலமாகி விட்டதாகச் சொல்லிப் போய்விட்டார். இந்திராணி சோர்ந்து உட்கார்ந்து விட்டாள். 'கந்தப்ப நட்டுவனாருக்கு வயதாகிவிட்டது. ஏதாவது அசம்பாவிதம் நேர்ந்து விடும் என்று பயந்து ஆடியபாதத்தை அழைத்து வந்தால் இப்படியாயிற்றே. ஆயுளைப் பற்றி மட்டும் எந்த முடிவுக்கும் வர முடியாது. அது ஆண்டவன் நியதி' என்று எண்ணலானாள்.

ஆடியபாதத்திடம் இருநூறு ரூபாய் லஞ்சம் பெற்று, கந்தப்ப பிள்ளையை வரவொட்டாமல் செய்த சந்திரன் குற்ற உணர்ச்சியில் கண்ணீர் பெருக்கினான். ஆடியபாதத்தின் மறைவுக்குத்தான் அவன் அப்படி வருந்தப்படுகிறான் என்று பார்க்கிறவர்கள் நினைத்துக் கொண்டார்கள்.

கச்சேரிகளை ரத்து செய்துவிட்டு ஊருக்குப் புறப்படுவதற்கான காரியங்களில் மானேஜர் மனம் செலுத்தினார்.

**க**ந்தப்ப நட்டுவனார் நடராஜர் சிலை முன்னால் கண்ணீர் வழிய அமர்ந்திருந்தார். அவர் கையில் ஆடியபாதத்தின் மரணத்தைப் பற்றிய செய்தி வந்த பத்திரிகை இருந்தது.

"இறைவா! நீ ஆடி மனிதர்கள் ஆசாபாசங்களைத் துறந்து பேரின்ப நிலையை அடைய வழி காட்டுகிறாய். நானோ ஆட்டத்தையே தொழிலாகக் கொண்டு மக்கள் மனத்தில் ஆசாபாசங்களை அதிகப்படுத்த முயலுகிறேன். பணத்தைப் பார்த்ததும் உன்னையும் என் சிஷ்யப் பெண்ணையும் மறந்து விட்டேன். எனக்குப் பேராசையைக் கொடுத்து மனத்தில் என்னென்னவோ கற்பனைக் கோட்டைகளைக் கட்டச் செய்து அதனால் நான் பட்ட மன உளைச்சலையே எனக்குத் தண்டனையாக அளித்து விட்டாய். இனிமேல் எனக்கு எந்தக் கஷ்டத்தைக் கொடுத்தாலும் கொடு. இந்தப் பேராசையை மட்டும் கொடுத்து விடாதே. அதை என்னால் தாங்க முடியாது. வறுமையிலும் கஷ்டங்களிலும் நான் உன்னை மறக்கவில்லை. ஆனால் பணத்தைப் பார்த்ததும் உன்னை மறந்து விட்டேன். நான் இனி ஆசைக்கு அடிமையாக மாட்டேன்" என்று மனத்தால் நினைத்துக் கண்ணீர் விட்டார் கந்தப்ப பிள்ளை. குத்துவிளக்கின் ஒளியில் நடராஜர் சிலை பிரகாசித்தது. ஆடும் தெய்வத்தின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

## காங்கிரஸ் மந்திரிகள் கவனிக்க!



‘‘பர்மிட் — லைசென்ஸ் விஷயத்தில் ருமேனியா இந்தியாவையும் மிஞ்சிவிட்டது! காரணம், அங்கு தாடி வைத்துக் கொள்ளக்கூட ‘லைசென்ஸ்’ வாங்க வேண்டும்!

தாடி வைத்துக் கொள்ள விரும்புபவர் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று முதலில் தெரிவிக்க வேண்டும். தாடி வைக்கப் போவதன் காரணத்தைக் கூறவேண்டும் — அதாவது, ‘‘நடிப்புக்காக’’, ‘‘கன்னத்திலுள்ள வடுவை மறைப்பதற்காக’’ — போன்ற காரணங்களில் ஒன்று. இவ்வளவுக்கும் பிறகு கிடைக்கும் ‘தாடி லைசென்ஸை’ எப்போதும் கையோடு வைத்திருக்க வேண்டும்! யாராவது அதிகாரி திடீரென்று கேட்கும் போது ‘லைசென்ஸை’க் காட்டாவிடில் அவர்கள் கடும் தண்டனை அனுபவிக்க வேண்டும்!

ஆதாரம் :
‘‘ பிரின்ஸ் ’’
தகவல் :
‘‘ஹிபெஸ்கே’’

பஞ்சுவைப் பக்கம்!

காது கேட்காத குழந்தைகளுக்குக் காது கேட்கச் செய்வதற்கான புதுமையான கருவி மேற்கு ஜெர்மனியில் உருவாக்கப்பட்டிருக்கிறது. ஜெர்மனியில் காதுக் கோளாறு உள்ள குழந்தைகளுக்குக் கேட்கவும், பேசவும் பயிற்சி அளிக்க இக்கருவியைப் பயன்படுத்துகிறார்கள். இல்லையென்றால் காதுகேட்காததால், குழந்தைகள் ஊமைகளாகவும் ஆகிவிடுவார்கள்! முதன் முதலில் சத்தத்தைக் கேட்டுப் பேசப் பழகும் குழந்தைகளின் முகத்தில்தான் எத்தனை வித உணர்ச்சிகள் கொப்பளிக்கின்றன. இதனை அருமையாகப் படமெடுத்த புகைப் படக்காரர், 1967 சர்வதேசப் புகைப்படப் போட்டியில் வெற்றிபெற்றார். இப்போட்டியில் அர்ஜென்டினா முதல் ரஷ்யா வரை பல்வேறு நாடுகளிலிருந்து 2096 புகைப்படக்காரர்கள் கலந்து கொண்டனர்.

(யூ. பி. எஸ்.)



### வட்டவடிவக் கைக்குட்டை

ஆதாரம்: ‘ஹெமினா’
தகவல் : ‘ராமன்’

பிரான்சில் 16வது லூயி மன்னர் ஆண்டுவந்த காலத்தில் அவருடைய பட்டத்தரசியான ‘மேரி அந்த்வானே’ தோட்டத்தில் இருந்த ரோஜாப் பூவை அவசரமாகப் பறித்ததில் ராணியின் கையில் ரோஜாச் செடியின் முள் குத்திவிட்டது. கையில் ரத்தம் வழியத் தொடங்கியது. உடனே வேலைக்காரியை மருந்து கொண்டு வந்து ஒரு கைக்குட்டையால் கட்டு என்று உத்தரவு இட்டாள். வேலைக்காரி அப்படியே செய்தாள். ஆனால் அந்தக் காலத்து வழக்கப்படி கைக்குட்டை வட்டவடிவமாக இருந்ததால் அதைக் கொண்டு காயத்தின் மீது கட்ட முடியாமல் இருந்தது. இப்படி வசதிக் குறைவாய் இருந்ததைக் கண்ட அரசி ‘இனிமேல் நாட்டில் வட்ட வடிவமான கைக் குட்டையையே உபயோகிக்கக் கூடாது’ என்ற ஓர் உத்தரவைப் பிறப்பித்தாள். அதிலிருந்துதான் கைக்குட்டை சதுர வடிவைப் பெற்றது.

## பல்சுவைப் பக்கம் 2

### பத்து லட்சமா, பத்து குழந்தைகளா ?

ஒரு சினிமா நடிகையைப் பத்திரிகாசிரியர் ஒருவர் பேட்டி கண்டார். அவளிடம், ''உனக்குப் பத்து லட்சம் ரூபாய்கள் அல்லது பத்துக் குழந்தைகள் கிடைப்பதாக இருந்தால் இரண்டில் நீங்கள் எதை விரும்புவீர்கள்?'' என்று கேட்டார்.

''பத்து குழந்தைகளைத்தான் விரும்புவேன்'' என்று பதிலளித்தாள் நடிகை. ''ஏனென்றால், பத்து லட்சம் ரூபாய்கள் பெற்ற பின்னும் மேலும் மேலும் பண ஆசை அதிகரித்துக் கொண்டே இருக்கும். பத்துக் குழந்தைகளைப் பெற்றாலோ போதும் போதும் என்றாகிவிடும்!''



ஆதாரம் : ''வொர்ல்ட் டைஜஸ்ட்''

தகவல் : 'ராமன்'



### ஐந்து கோடி கடன் - அது அரசாங்கம்!

ஐந்து ரூபாய் நீ கடன் வாங்கினால் ஓட்டாண்டியாகிறாய்!

ஐம்பதாயிரம் கடன் வாங்கினால் வியாபாரி ஆகிறாய்!

நீ கடன் வாங்கும் தொகை ஐந்து லட்சமாக இருந்தால் தொழிலதிபராக விளங்குகிறாய்!

நீ ஐந்து கோடி கடன் வாங்கினால் அப்போது அரசாங்கமாக மாறி விடுகிறாய்!

— மூர்த்தி

நன்றி :
ஓரியண்டல் நியூஸ்





சென்னை யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிமிடெட்டின் பொருளாளர் திரு எ. எம். நடராஜன் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி **விஜயா**வுக்கும் சென்னை திரு கே. சுப்பிரமணியன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **எஸ். சேகர்** அவர்களுக்கும் சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

## ஸ்ரீ வேதாந்த தேசிக சம்பிரதாய சபா (Regd.)

**தேசிக பவனம்**

543, எடன்வாலா ரோடு
மாதுங்கா, பம்பாய் -19

**சபா கட்டிட நிதிக்காக**

**குமாரி யாமினி கிருஷ்ணமூர்த்தியின்**
பரதநாட்டியம்

**1968 ஜனவரி 19 தேதி வெள்ளிக்கிழமை**
இரவு 8 மணிக்கு

**கிங்ஸ் சர்க்கிள்**
**ஸ்ரீ ஷண்முகானந்தா ஹாலில்**

டிக்கெட்டுகள்: ரூ. 100, ரூ. 50, ரூ. 25, ரூ. 10, ரூ. 5, ரூ. 3, ரூ. 1.

சபா வெளியீடுகள்: வேதாந்த தேசிகரின் தோத்திரங்கள் அடங்கிய சம்ஸ்கிருதப் பதிப்பு குறைவாகக் கைவசமுள்ளது. பிரதி ரூ. 4-க்கு விற்பனைக்குக் கிடைக்கும். தபால் செலவு தனி. சபாவை அணுகவும்.
திருப்பாவை: திருக்கண்ணம் நரசிம்மராகவாச்சாரியார் ஸ்வாமிகளின் உபன்யாசம் தினசரி இரவு 8-15 மணிக்கு-ஜனவரி 14ந் தேதி வரை சபா ஹாலில் நடைபெறும்

# சீமா

**கோமளா**

''சீமா! சீமா! எங்கேயும் போயிடாதே! நீபாட்டுக்கு நீள நடந்துடாதே! அப்புறம் உங்க அண்ணாவுக்கு என்னாலும் பதில் சொல்ல முடியாது.....'' சமையல் அறையிலிருந்து ராஜியின் குரல் ஸ்டவ்வின் 'புஸ்' என்ற சத்தத்தையும் மீறி எழும்பி வந்து அவன் காதுகளில் பாய்ந்தது.

''இல்லே, மன்னி! இங்கேயேதான் இருக்கேன்.....!'' அதே உரத்த குரலில் பதிலளித்து விட்டுப் படியிறங்கினான் சீமா.

அரைகுறையாய்க் கட்டிவிடப்பட்டிருந்த பேஸ் மட்டத்தின் மேல் போய் இடுப்பின் மேல் இரண்டு கரங்களையும் வைத்துக் கொண்டு ராஜ தோரணையில் நின்றான். கண்களை நாற்புறமும் சுழல விட்டான். ரோஜாச் செடியும், வாடி உலர்ந்த எலுமிச்சைச் செடியும், முல்லைக் கொடியும், வாழைக் கன்றும் அவனை 'வா வா' என்று அசைந்தாடி அழைத்தன.

ஒவ்வொரு செடியருகிலும் சென்று அதனைக் குழந்தையைத் தடவுவது போல் ஆசையுடன் தடவிக் கொடுத்தான்.

''சித்தப்பா! சித்தப்பா!''

''ரமிக் குட்டி! இங்கே ஓடி வா!''

மலர்ந்த முகமும் சிரித்த கண்களுமாய் ஏழு வயதுப் பெண் ஒருத்தி அவன் அருகில் ஓடி வந்தாள்.

''சித்தப்பா, நீ ஜுரமாப் படுத்திண்டிருக்கச்சே, பாவம், இந்தச் செடிக்கெல்லாம் ஒருத்தரும் தண்ணியே கொட்டல்லே!'' — உதட்டைக் குவித்துக் குவித்துக் கண்ணைச் சிமிட்டியபடி ரமா கிண்கிணித் தொண்டையில் பேசினாள்.

''நீ இங்கேயே இரு ரமிக் குட்டி!'' என்று கூறிவிட்டுப் பரபரவென்று கிணற்றை நோக்கி நடந்தான் சீமா.

''சீமா! சீமா! தண்ணியை இழுத்து இழுத்துத் தலையிலே கொட்டிக் குளித்து எவ்வளவு நாளாச்சு.... ஒரு மணி நேரத்துக்குக் குறையாமல் குளிப்பியே முன்னெல்லாம்...'' — என்ன ஆச்சரியம்...! கிணற்று நீரா பேசறது! கிணற்றுள் எட்டிப் பார்த்தான் சீமா!

''உனக்குக் குளிக்க ஆசையாயில்லே?'' நீரில் தெரிந்த அவனது பிம்பமே அவனைக் கேட்பது போல் பிரமை. சரசரவென்று நாலு குடங்கள் இழுத்துச் செடிகளுக்கு ஊற்றிவிட்டு மேலும் மேலும் நீர் மொண்டு தலையில் ஊற்றிக் கொள்ள ஆரம்பித்தான்.

'ஆஹா! என்ன ஆனந்தம்! என்ன ஆனந்தம்?' என்று பாட ஆரம்பித்தான். ''சீ! பாட வாயைத் திறந்தால் கழுதைக் குரல் தான் கிளம்பறது.....!'' திறந்த வாயில் நீரை ஊற்றிக் கொப்புளித்துத் துப்பினான்.

''சித்தப்பா! சித்தப்பா! அதோ பார், அங்கே மூட்டுக் கல் வைச்சிருக்கே, அது வரைக்கும் துப்ப முடியுமா.....?''

''ஏன் முடியாது? உன்னாலேதான் முடியாது.....''

''என்னாலே முடியாதா? இதோ பாரேன்.'' வாயில் கொட்டிய நீரைச் சர்ரென்று துப்புகிறாள் ரமா.

''ஐயையே! அவ்வளவு தூரத்துக்கு எட்டல்லியா? இப்போ, பார், நான் துப்பறதை! பார்த்தியா? எவ்வளவு தூரத்திலே போய் விழுந்தது.......!''

''சீமா! சீமா! டேய் சீமா!'' ஸ்டவ்வின் சத்தத்தினால் ராஜியின் குரல் எழும்பவில்லை. ''எங்கே போய்த் தொலைந்தானோ? ரமாவை வேறே கூட்டிண்டு போயிட்டான் போலே இருக்கு.... சத்தத்தையே காணும்....''

கொல்லைக் கிணற்றில் ராட்டின ஓசை கேட்டது. ஸ்டவ்வை அணைத்துவிட்டு அவள் வெளியே வரவும், 'ஓ'வென்று கத்தியபடி ராமநாதன் உள்ளே நுழையவும் சரியாயிருந்தது. ''ராஸ்கல்! கொழுப்பு ரொம்பத் தான் ஏறியிருக்கு. ஒரு மாசமா இருந்த உடம்பு என்ன? இப்ப என்ன அட்டகாசம் பண்ணறான்?...நீ வீட்டிலேதானே இருக்கே, அவனைக் கவனிக்காமல் என்ன கிழிச்சிண்டிருந்தே... ம்.....?''

''என்ன ஆச்சு? என்ன பண்ணிட்டான்?''

''என்னைக் கேளு! நீதான் வீட்டிலிருக்கே! நேத்து எங்கெல்லாம் சுத்தப் போனான்? வீட்டிலே விழுந்து கிடக்கிறதுக்கென்ன? ஊர்ப்பெருதனம் ஜாஸ்தியாயிண்டு வர்றது.''

''என்ன விஷயம்னுதான் சொல்லுங்களேன்.....!''

''என்ன விஷயமா? ராஸ்கல் வரட்டும், சொல்கிறேன்! முதுகுத் தோலை உரிச்சு விட்டுத்தான் மறு வேலே.... சீமா.. டேய்!''

கத்தியவாறே சோப்புப் பெட்டியையும் டவலையும் தேடுவதில் முனைந்தான் ராமநாதன். அவன் தேடி எடுத்து வருவதற்குள் சீமாவை எச்சரித்து வெளியே அனுப்பி விடத் துடித்தவளாய்க் கொல்லைப்புறம் சென்றாள் ராஜி.

அங்கே — கிணற்றருகே — நீரை மொண்டு மொண்டு தலையில் ஊற்றிக் கொண்டும், வாயில் ஊற்றிக் கொப்புளித்துத் துப்பிக் கொண்டும் ஜலக்கிரீடை செய்து கொண்டிருந்தான் சீமா.

''டைபாய்டில் படுத்து எழுந்த உடம்பு. என்னடா, சீமா! இது! உங்க அண்ணா கத்துவதற்கு ஏற்றாற்போல் நீயும் ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று செய்துண்டேயிருக்கியே...!'' என்றவள் உள்ளே ஓடிப் போய்த் துண்டை எடுத்து வந்து அவன் தலையைத் துவட்டி விட்டாள்.

''இப்படிக் கொடு, மன்னி! நானே துடைச்சுக்கறேன்..... அதோ பாரு, அங்கே ரமிக் குட்டியை!''

அங்கே — ரமாவும் பக்கெட்டிலிருந்த நீரை எடுத்துத் தலையில் ஊற்றியபடி நின்று கொண்டிருந்தாள்.

''ஐயையோ! அண்ணா பார்த்தால் அவ்வளவுதான்! உன்னைக் கொலையே பண்ணி

விடுவார்! நீ குளிச்சதுமில்லாம அவள் தலையிலேயும் கொட்டி.... நன்னுத்தான் இருக்கு போ....!'' அவசரம் அவசரமாகப் புடவைத் தலைப்பைப் பிரித்து ரமாவைத் துடைத்து உள்ளே இழுத்துச் சென்றுள் ராஜி. அந்தப் பதற்றத்தில் ந சொல்ல வந்ததை மறந்தே போய் விட்டாள்.

இப்படித்தான் சீமா ஏதாவது ஒன்று மாற்றி ஒன்று ஏடாகூடமாகச் செய்துவிட்டுத் தான் திட்டும் அடியும் வாங்கிக் கொள்வதோடு மதனிக்கும் வாங்கி வைப்பான்.

வயது பதினறைக் கடந்திருந்தாலும் ஒரு சிறு குழந்தை மாதிரியே இருந்து வந்தன அவன் பேச்சும் செயலும். ஆன வயதுக்கு ஒரு நல்லது, பொல்லாததுகூடவா தெரியாது? போன மாதம் சுரத்தில் படுத்திருந்தபோது கூட 'சன்னல் அருகில்தான் படுத்துக் கொள்வேன்' என்று அடம் பிடித்துத் திட்டும் அடியும் வாங்கிக் கட்டிக் கொண்டான்

சீமாவை ஓர் இரண்டுங்கெட்டான் என்று தான் பிறர் சொல்லுகிறார்கள். சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் திடீர் திடீரென்று பேசுவான். ஓர் இடத்தில் நிற்காமல், வெய்யிலோ, மழையோ சுற்றிக் கொண்டே இருப்பான். சுற்றின நேரம் போகக் கிணறும், தோண்டியும், செடி கொடிகளும் இருக்கவே இருக்கின்றன. அடர் மழை வந்தாலும் தன் கையால் இரண்டு குடம் நீர் இழுத்துச் செடிக்குக் கொட்டினுல்தான் அன்று அவனுக்குத் தூக்கம் வரும். படிப்பு ஏறவேயில்லை. எட்டாவதோடு அதற்குக் கும்பிடு போட்டாகி விட்டது. ஒழுங்காகப் பள்ளிக்கூடம் போனுல்தானே படிப்பு வரும்? மலை உண்டா, மடு உண்டா, ஏரி எங்கே, குளமும் குட்டையும் எங்கே என்று திரிபவனுக்குப் படிப்பும் பாடமும் எப்படி வரும்? ஊரெல்லாம் மேய்ந்துவிட்டு வரும் காளை மாட்டைப் போல் நேரம் காலம் இல்லாமல் வீட்டுக்கு வருவான். அண்ணன் வீட்டில் இல்லாவிட்டால் பிழைத்தான். இருந்து விட்டாலோ அவ்வளவுதான். செம்மையாய்க் கிடைக்கும். அடிபட்டு அடிபட்டு உரமேறிய உடல் அது. எத்தனை அடி வாங்கினுலும் வாயிலிருந்து 'அம்மா!' என்று ஒரு சத்தம் எழாது. கண்ணிலிருந்தும் ஒரு சொட்டு நீர் விழாது. அவன் அடிபடுவது ராஜிக்கே பொறுக்காது. இடையில் போய்த் தடுத்துத் தானும் நாலு வாங்கிக் கட்டிக் கொள்வாள்.

ஒரு பக்கம் முன்கோபக்காரனுன கணவன், மறுபுறம் வயதாகியும் மூளை வளர்ச்சியடையாத மைத்துனன். அவள் மாமியார் சாகும் போது, ''அடியம்மா, ராஜி! இரண்டு குணம் கெட்டதுகளை உன் பொறுப்பில் சுமத்திட்டுப் போறேனே! நீதான் பொறுமையாக இருந்து காத்துக் கரையேற்றணும்!'' என்று அழுது கொண்டேதான் செத்தாள்.

கடந்த பத்து வருடங்களாக அவளும் எப்படியோ தணிந்தும் பணிந்தும் கணவனிடம் சரிக்கட்டித்தான் வாழ்ந்து வருகிருள். தன் கணவனது கோபத்தையாவது தாக்குப் பிடிக்கலாம் போல் இருந்தது. இந்தச் சீமாவைத்தான் என்ன செய்வது, எப்படிக் கட்டிக் காப்பது என்றே தெரியவில்லை அவளுக்கு. ஒரு நிமிடம்கூட வீட்டில் தங்காமல் ஊரைச் சுற்றி வந்து பலபேர்பட ஏச்சும் பேச்சும் கேலிச் சிரிப்பும் பட்டுத் திரிவதைக் கண்டு மனம் வெதும்புவாள்; மறுகுவாள்; கலங்குவாள்.

முன் தினம் அவனை எங்கும் போகாதே என்று கண்டிப்புடன்தான் கூறியிருந்தாள். ஆனால் பிற்பகல் சற்றுக் கண்ணயர்ந்திருந்த போது அவன் எங்கே போனுனே, என்ன செய்தானே தெரியவில்லை. இன்று ராமநாதன் இரைகிருன். கொல்லைப்புறம் ஓடினுள் ராஜி. அங்கே —

''அயோக்கிய ராஸ்கல்! வாயைக் கையை வைச்சுண்டு சும்மா இருக்க முடியல்லியா? நேற்று சுந்தரத்திடம் என்ன உளறிக் கொட்டினே?'' ஆக்ரோசத்துடன் கேட்டுக் கொண்டிருந்தான் ராமநாதன்.

''சுந்தரம் மாமாகிட்டே நான் ஒண்ணும் சொல்லலியே !''

''சொல்றதையும் சொல்லிவிட்டுப் பொய் வேறயா.....?''

''இல்லியே? நான் பொய்யா ஒண்ணும் சொல்லலியே !''

''ராஸ்கல்!.... இல்லே இல்லேன்னு சாதிக்கறயா? உன்னை என்ன செய்யறேன் பாரு! வீட்டு விஷயத்தையெல்லாம் ஊரார்கிட்டே சொல்றது என்ன பழக்கம்? ஃபூல்.. இனி வீட்டை விட்டு வெளியே போ சொல்றேன். காலை உடைச்சுக் கையில் கொடுத்துடறேன். மடக் கழுதை!'' — கண்டபடி திட்டியவாறு அருகில் கிடந்த ஒடிந்த குச்சியொன்றை எடுத்துக் கண்மண் தெரியாமல் விளாச ஆரம்பித்தான் ராமநாதன்.

அதற்கு மேல் பொறுக்க ராஜியின் பெண் மனம் இடம் கொடுக்கவில்லை.

''ஐயையோ! போதும் போங்கோ!... உடம்பு வந்து தேறின குழந்தையை அடிச்சு அடிச்சே கொன்னுப்பிடாதேங்கோ....!'' ஓடி வந்து தடுத்த ராஜியின் மீதும் நாலு அடி விழுந்தது.

''இன்று இந்தத் தடியனுக்குப் பட்டினி போடு, சொல்றேன். அப்பத்தான் கொழுப்பு அடங்கும். டேய்! வாசற்படியைத் தாண்டினு.... அப்புறம் உன் கால் உன்னுடையதல்ல.... ஜாக்கிரதை!'' என்று உறுமிவிட்டு எட்டரை மணி ரயிலைப் பிடிக்கக் கிளம்பிவிட்டான் ராமநாதன்.

''சாப்பிட்டுப் போக....!''

''உன் சாப்பாட்டை நீயே கொட்டிக்கோ.''

கண்களில் நீர் வழிய ராஜி சீமாவைப் பார்த்தாள். கல்லால் அடித்த சிலையென நின்றிருந்தான் அவன்.

பத்து மணிக்கு மேல் வீடு அமைதியில் ஆழ்ந்து கிடந்தது. ரமாவை ஆயாவோடு பள்ளிக்கு அனுப்பியாகிவிட்டது. சீமா சன்னல் மேடையில் உட்கார்ந்திருந்தான். சன்னலைத் தாண்டி, தோட்டத்தைத் தாண்டி அவன் பார்வை வெகு தூரம் ஓடிக் கொண்டிருந்தது. தோட்டத்தை அடுத்த பொட்டல் வெளி, அதைத் தாண்டித் தூரத்தில் ஏரி, ஏரியில் மீன் பிடிக்கும் சிறுவர்கள், துணி துவைக்கும் சலவையாளர்கள், அதையும் தாண்டி அந்தச் சிறிய குன்று — குன்று நிறைந்த பசுமை — அங்கு பாடும் பறவைகள், பறக்கும் சிட்டுகள் — அனைத்தும் அவனை 'வா,

வா' என்று விடாமல் அழைத்துக் கொண்டிருந்தன. சீமாவுக்குக் கையும் காலும் மனமும் பறந்தன.

''சீமா! வாப்பா, சாப்பிடலாம்!''

ஏக்கம் தோய்ந்த கண்களுடன் மன்னியை ஏறிட்டு நோக்கினான். அண்ணன் அடித்ததற்காகவோ, பட்டினி போடு என்றதற்காகவோ எழுந்த ஏக்கம் அல்ல. சுதந்திரமாகத் திரிந்த காலைக் கட்டிவிட்டானே என்ற கவலைதான்.

''அண்ணா ஒன்றும் சொல்ல மாட்டார். வா, சாப்பிட!'' மன்னியின் அன்பு அவனை இயந்திரமாக இயக்கியது. மெதுவாக எழுந்து வந்து கலத்தின் முன் அமர்ந்தான்.

''ஏண்டா, சீமா? நேற்று என்னடா நடந்தது? சுந்தரம் மாமாகிட்டே என்ன சொன்னே?''

''இல்லே மன்னி! நேற்று நீ தூங்கிண்டிருந்தே பாரு, அப்போ இப்படியே ரயில்வே லேனோடே போயிண்டிருந்தேன். சுந்தரம் மாமா எதிரே வந்தார். ''ஏண்டா சீமா! உங்க அண்ணா வீட்டிலே இருக்காரா?''ன்னு கேட்டார். 'இந்த நேரத்திலே எப்படி மாமா அண்ணா வீட்டிலே இருப்பார்?' அப்படின்னு நான் சொன்னேன். ''இல்லேடா! இன்னிக்கு லீவு போடப் போறதா சொல்லிண்டிருந்தான். அதனாலே கேட்டேன். நம்ம கோபுவை ஆஸ்பத்திரியிலே 'அட்மிட்' பண்ணியிருக்கேண்டா! மாசக் கடைசியாயிடுத்தோன்னோ, கையிலே பணம் இல்லே. உங்க அண்ணாவைத்தான் கேட்கலாம்னு யோசிச்சுண்டு இருக்கேன்' அப்படீன்னார். பரிதாபமாயிருந்தது. 'எங்கண்ணாகூட இன்னிக்கு ஆபீஸிலே போனஸ் தரப் போகிறான்னு பேசிண்டிருந்தா மாமா. நீங்க ராத்திரி வந்து கேளுங்கோ. தருவார்'னு சொல்லிட்டு வந்துட்டேன் மன்னி. நான் என்ன பொய்யா சொன்னேன்? நேத்து காலையிலே அண்ணா உங்ககிட்டே சொல்லிண்டிருந்ததைத்தானே, நான் அந்தச் சுந்தரம் மாமாகிட்டே சொன்னேன்? அது தப்பா மன்னி....?''

அந்தச் சிறுவன் கூறிய மெய்யைப் பொய் என்பதா? அல்லது முதல் நாள் இரவு கொண்டு வந்த போனஸ் பணம் முந்நூறையும் இரும்பு பீரோவில் வைத்துப் பூட்டிவிட்டுக் காலையில் வந்த நண்பரின் அவசரத் தேவை அறிந்தும் போனஸே இன்னும் வரவில்லை என்று தன் கணவன் கூறிய பொய்யை மெய் என்பதா? — குழம்பிய நிலையிலும் அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. உண்மைக்கும் பொய்க்கும்கூட இடம் காலம் பொருள் உணர்ந்து கூறினால்தான் மதிப்பு கிடைக்கும் போலும்!

அண்ணன் தந்த பரிசுகளின் ரேகைகள் முதுகிலும் தோளிலும் கையிலும் பளிச்சிடக் கலத்தில் மீதி இருந்த உணவை உண்பதில் கருத்தைச் செலுத்தினான் சீமா. அவளுக்கோ அந்தத் தாயில்லாப் பிள்ளையின் தழும்புகளைக் கண்டபின் உணவு வேண்டியிருக்கவில்லை.... குறைச் சாப்பாட்டோடு எழுந்து விட்டாள்.

''சீமா! தேங்காய் எண்ணெய் தடவி விடுகிறேன் வா!'' பரிவுடன் அவனைக் கூப்பிட்டாள் ராஜி கையில் தேங்காயெண்ணெயைக் குழைத்தவாறு.

'வேண்டாம்' என்பதுபோல் தலையை ஆட்டினான் சீமா. இன்னமும் அவன் கண்கள் சன்னலைத் தாண்டி வெளி உலகிலேயே சஞ்சரித்துக் கொண்டிருந்தன.

''மன்னி! நான் இனிமேல் வெளியிலே போகவே கூடாதா? மன்னி! இன்னிக்கு மட்டும்— கடைசியா ஒரே ஒரு தரம் போயிட்டு ஓடி வந்துடறேன்....!''

''வெளியிலே போய் என்னடாப்பா செய்யப் போறே? உடம்பு நன்னா குணமாகட்டும். அப்புறமா போகலாம், ம்?''

அவன் கண்களில் பளிச்சிட்ட ஏக்கத்தை மாற்ற வேறு பேச்சுப் பேசத் தொடங்கினாள்.

''ஏண்டா, சீமா! உன்னை மறுபடியும் ஸ்கூல்லே சேர்த்துடச் சொல்றேன். ஒழுங்காப் போய்ப் படிக்கிறயா? நீ படிக்கமாட்டேங்கிறதினாலேதான் உன் மேல் கோபம் உங்க அண்ணாவுக்கு....!''

''...... ............''

''டேய் சீமா! சொல்லுடா! ஸ்கூலுக்குப் போறயா? படிச்சுப் பெரியவனாகி அண்ணா மாதிரி ரயில்லே தினமும் வேலைக்கு ஜோராப் போனியாம்! அப்போ எவ்வளவு சந்தோஷமாயிருக்கும் தெரியுமா?'' கண்களில் ஆவல் பொங்க ஆதுரத்துடன் வினவினாள் அவள்.

இலேசாகத் தலையை அசைத்த சீமா மன்னியுடன் ஒப்பந்தம் செய்து கொள்பவன்



போல, ''இன்னிக்கு மட்டும் அந்த மலை வரைக்கும் போயிட்டு வந்துடறேன் மன்னி!'' என்று அவசரமாகக் கேட்டான்.

''என்னடா, வச்சிருக்கு அங்கே?''

இயற்கையின் அழகை அறிந்து அனுபவித்து மகிழும் மனத்தை அவனுக்கு அளித்த ஆண்டவன், அநுபவித்ததை விண்டு விளக்கமாகக் கூறும் அறிவையும் திறனையும்தான் அளிக்கவில்லையே !

''மலை மேலே குந்துமணிச் செடியிலேந்து குந்துமணி பறிச்சிண்டு வரேன்னு ரமிக்குட்டிக்குச் சொல்லிட்டேன் மன்னி. அதை மட்டும் போய்ப் பறிச்சிண்டு... சீக்கிரமா வந்துடறேன் மன்னி.....!'' கெஞ்சும் விழிகள் இரண்டும் அவள் மனத்தைக் கிறக்கின.

''சரி, போயிட்டு அண்ணா வர்றதுக்குள்ளே சீக்கிரமா வந்துடு, என்ன? அண்ணா இன்னிக்குச் சீக்கிரமா வந்தாலும் வந்துடுவார்.''

''சரி, மன்னி !''

குதியும் கும்மாளமுமாக வீட்டை விட்டு ஓடினான் சீமா.

'இந்தக் குழந்தையைக் கடவுள்தான் காப்பாத்தணும்' என்று எண்ணமிட்டவளாய், வேலையில் மூழ்கினாள் ராஜி.

சட்டைப் பை, அரை நிஜார்ப் பை இரண்டும் நிரம்பி வழிந்துவிட்டது. அத்தனை குந்துமணி ! இனி பறித்தாலும் போட இடமில்லை.

''உம்....! உங்களையெல்லாம் பார்க்க இனி எப்போ வருவேனோ?'' நீண்ட பெருமூச்சுடன் தன் அந்தரங்க நண்பர்களுடன் பிரியாவிடை பெற்றவன் போலத் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு நடந்தான் சீமா.

வீடு நோக்கிப் பிரியும் பாதையில் மாறியவன் ஒருகணம் நின்று யோசித்தான்.

'ரமி மத்தியானம் ஆத்துக்கு வந்து சாப்பிட்டுட்டு ஆயாவோட மறுபடியும் பள்ளிக்கூடம் போயிண்டிருப்பா. போற வழியிலே பார்த்துக் குடுத்திடலாமே!'

விறுவிறு என்று ஒற்றையடிப் பாதையை அடைந்து டிரங்க் ரோட்டை அடைந்தான்.

'அட! அதோ, போயிண்டிருக்காளே, ரமா. நான் நினைச்சது சரியாய்ப் போச்சு. இப்படியே கிடுகிடுன்னு போனா அவளைப் பிடிச்சுடலாம்.... பாரேன் இந்த ஆயாவுக்கு என்ன கேடு? ரமாவைக் கையைப் பிடிச்சுண்டு போகப் படாதோ.... 'கையைப் பிடிச்சு அழைச்சுண்டு போ'ன்னு தலை மறையற வரைக்கும் மன்னி கத்திண்டே இருப்பாளே.... இங்கே என்னடான்னா கையை விட்டுட்டு ஆயா ஜோரா முன்னாலே நடந்து போறா..... இதை மன்னிகிட்டே சொல்லிடணும். இதோ ரோடைக் கிராஸ் பண்ணணும். இந்த ஆயா கையைப் பிடிச்சு அழைச்சுண்டுபோய் அந்தப் பக்கம் விடக்கூடாதோ? எதிரே வந்த யாரோடேயோ பேசிண்டு நிற்கிறாளே.... நாசமாய்ப் போக... ஐயையோ! எதிரே அவ்வளவு வேகமா அந்த லாரி ஓடி வர்றது.....! ஐயோ! ரமிக்குட்டி ரோடைத் தாண்டிண்டு இருக்காளே. லாரியை எப்படி நிறுத்தறது?'' ஹோல்டான்.... ஸ்டாப்... ஹோல்டான்...'' தொண்டை கிழியக் கத்தியவாறு ரமாவை நோக்கி ஓடினான் சீமா. பாதிச் சாலையைக் கடந்துவிட்ட ரமா அவனைத் திரும்பிப் பார்ப்பதற்கும், யமனைப் போன்ற லாரி பாய்ந்து ஓடி வருவதற்கும் சரியாக இருந்தது.

ஒரே ஒரு கணம்.... மின்னல் வெட்டும் நேரத்தில் ரமாவைப் பிடித்துச் சாலை ஓரத்துக்கு மிக வேகமாகத் தள்ளிவிட்டான் சீமா. ஆனால் அதற்குள் காரியம் மிஞ்சிவிட்டது. நாலாபுறமும் செக்கச் சிவந்த குந்துமணிகள் சிதறிக் கிடக்க நடுவில் இரத்த வெள்ளத்தில் சீமா மிதந்து கிடந்த கோலத்தைக் கண்ட துயரத்தில் அந்தச் சாலை மௌனமாக நீண்டு கிடந்தது.

வீலென்று அலறியவளாக, ''சித்தப்பா! சித்தப்பா !'' என்று கதற ஆரம்பித்த ரமாவின் கீச்சுக் குரல் கேட்டுச் சிதறியிருந்த ஜனங்கள் திரள ஆரம்பித்தனர். சிட்டாய்ப் பறந்த லாரியின் நம்பரைச் சிலர் கவனிக்க மற்றும் சிலர் வேகமாக வந்து கொண்டிருந்த காரை வழிமறித்து, அதில் சீமாவை ஏற்றி ஆஸ்பத்திரிக்கு அனுப்பினர்.

நீர் மல்கும் கண்களுடன் நெக்குருகும் நெஞ்சத்துடன் கட்டிலில் தலை முதல் கால் வரை கட்டுப் போடப்பட்டிருந்த உருவத்தைப் பார்த்துப் பார்த்துப் பரிதவித்துக் கொண்டிருந்தாள் ராஜி. மெதுவாகக் கண்ணை விழித்த சீமா மன்னியைப் பார்த்ததும் கேட்ட முதல் கேள்வி, ''ரமாவுக்கு ஒன்றுமில்லையே, மன்னி !'' என்பதுதான்.

ஈனகரத்தில் வந்த கேள்விக்கு விடையாக மெதுவாகத் தலையை அசைத்தாள் ராஜி. துக்கம் தொண்டையை அடைத்தது. குரல் எழும்பினால்தானே! பீறி வரும் கண்ணீரைச் சிரமப்பட்டு அடக்கியவளாக, — ''சீமா எப்படியிருக்குடா, இப்போ?'' என்று உடைந்த குரலில் கேட்டாள்.

'ரமாவுக்கு ஒன்றும் இல்லை' என்ற பதிலில் தன் மனத்தை லயிக்கவிட்ட வண்ணம் அதிலேயே ஒன்றிவிட்டான் அவன். அவன் முகத்தில் ஆத்மார்த்தமான நிம்மதியின் ஒளி, துலங்குவதைக் கண்கள் பளிச்சிட்டுக் காட்டின.

'வெறும் தண்டம்' என்று பலராலும் பழித்துரைக்கப்பட்ட தான் அவர்கள் நினைப்பது போல் வெறும் தண்டமல்ல, தன்னாலும் ஒரு மகத்தான காரியம் சாதிக்க முடியும் என்ற மானசீகமான திருப்தியின் சாயல் அவன் முகத்தில் நிழலாடியது.

திடீரென்று கனவு உலகத்திலிருந்து விழித்தெழுபவன் போல் மூடிய கண்களைத் திறந்த சீமா, ''மன்னி ! ரமா எங்கே?'' என்றான். நாலாபுறமும் சுழன்ற கண்கள் ரமாவைத் தேடின.

''சீமா ! அடுத்த அறைக் கட்டில்லே ரமா படுத்திண்டிருக்காப்பா. அவளுக்கு அடி ஒண்ணும் பலமில்லே. நீ தள்ளிவிட்டதிலே இலேசாக் காயம்தான் பட்டிருக்கு. ஆனா.... ஆனா.... உனக்குத்தான்... உனக்குத்தான்.''

வெடித்து வரும் விம்மலை அடக்கப் பிரயாசைப்பட்டவளாக முன்றானையைப் பந்தாகச் சுருட்டித் தன் வாயில் அடைத்துக் கொண்டாள்.

''அழாதே! மன்னி! எனக்குத்தான் உசிருக்குப் பயம். இல்லேன்னு டாக்டர் காலையிலே சொல்லிண்டிருந்தாரே. 'இரண்டு காலும் பிரயோசனம் இல்லாமப் போயிடும்... கட் பண்ணி எடுத்துடணும். மற்றபடி உயிருக்கு ஆபத்தில்லே....' அப்படின்னு டாக்டர் பேசிண்டிருந்தது என் காதிலே நன்னா விழுந்தது மன்னி. காதும் நன்னா கேக்கறது. கண்ணுக்கும் எல்லாம் நன்னாத் தெரியறது. வாயும் பேச முடியறது. பின்னே என்ன.... கால்தானே.... போனாப் போறது. 'படியை விட்டுக் கீழே இறங்கினது தெரிஞ்சா காலை ஒடைச்சுப்புடுவேன்'னு அண்ணா சொன்னதைக் கேக்காமப் போயிட்டேன் இல்லே.... அதான்..... எனக்கு நன்னா வேணும் மன்னி! எனக்காகவா அழறே? சே! ஏன் அழறே மன்னி? இதோ பாரு நான் எவ்வளவு தைரியமாக இருக்கேன். எனக்கு அழுகையே வரல்லியே..... நீ அழக் கூடாது.... ஐயையோ! இது என்ன அண்ணாகூட அழறார்....! ஆண்பிள்ளை எங்கேயாவது அழுவானோ? அண்ணா! கோபம் இல்லியே உனக்கு... அந்த ரூலே சன்னல் இனிமேல் எனக்குத்தான். அங்கே உக்காந்துண்டிருந்தா கோவிச்சுக்க மாட்டியே.... இனிமே சமத்தா அந்த ரூலே சன்னலிலேயே உட்கார்ந்து எல்லாம் பார்த்துண்டிருப்பேன்..... இனிமே வெளியே போகவே மாட்டேன்.... அண்ணா அழாதே. அண்ணா.... உடம்பு சரியானப்புறம் நான் கட்டைக் காலை வைச்சுண்டு 'டக்டக்'னு ஜோராப் பள்ளிக்கூடம் போறேன் அண்ணா. போய்ப் படிக்கிறேன் அண்ணா.... உம்... சரின்னு சொல்லண்ணா....!''

அளவுக்கு மீறிப் பேசிய ஆயாசத்தில் கண்கள் தாமே மூடின. வறண்ட உதடுகளை நாக்கால் தடவி ஈரப்படுத்தியவண்ணம் கண்களை இலேசாகத் திறந்தான் சீமா.

'அண்ணாவும் மன்னியும் ஏன் இப்படிக் குலுங்கிக் குலுங்கி அழுகிறார்கள்? யாராவது செத்துப் போனால்தானே அழுவா....? நான்தான் செத்துப் போகல்லியே! உசிரோடத்தானே இருக்கேன்! ஏன் அழணும்? பைத்தியம்! பைத்தியம்! எப்போ அழணும்னுட்டுத் தெரியல்லே இவங்களுக்கு?'

குமுறி அழுது கொண்டிருந்த இருவரையும் மாறி மாறிப் பார்த்துத் திகைத்தான் சீமா.

---




**காலண்டர் அச்சிடுவதற்கு**
**எந்தவித இலக்கணமும்**
**கிடையாது.**
**எப்படி வேண்டுமானாலும் எந்த**
**உருவத்திலும் அச்சிடலாம்.**
**அதே போல இந்தக் கவிதையும்**
**எந்த இலக்கணத்துக்கும்**
**அடங்காததுதான்!**



காலண்டர் என்ற பொருள்; ஏன் கண்டு பிடித்தாரோ?
கற்பனையில் ஏன் இதையும் புத்தாண்டில் பிணைத்தாரோ?
ஆண்டு பிறந்து விட்டால் அதை வேண்டி அலைவோர்க்கு
ஆண்டவனே 'செகண்டரி'தான்; ஆசைக்கும் அளவுண்டோ?

குழல் ஊதும் கண்ணன்பின் கோபியர்கள் மெய்மறந்து
க்யூவாகப் போனார்கள்; கோகுலத்தில் நடந்த கதை.
காலண்டர் கையராய் கண்ணிலெவர் பட்டாலும்
காக்காயாய் அவர் தயவைக் கறப்பதுவே இன்றுகதை:



எந்த ரிஷி சபித்தாரோ? எந்தமுனி முறைத்தாரோ?
எழில் மிகுந்த சுவரெல்லாம் 'இந்திரனா'க வென்று
அரையடிக்கு ஓர் ஆணி அடித்துப் புகுத்தி விட்டு
அலங்கோலமாக்கி அதை ரசிக்கப் பார்க்கின்றார்.

இதோடு பத்தெனக் கொக்கரித்துக் காலண்டர் கொள்முதலில்
இதயத்தைப் பறிகொடுத்து நேரத்தை வீணடிக்கும்
எத்தனையோ நண்பர்கள் எனக்கிருக்கும் வேளையிலும்
எனக்கொரு காலண்டர் எடுத்தளிப்பார் யாருமில்லை!

— மேனு

175

# கலியாணப் பரிசு





## கோமதி ஸ்வாமிநாதன்

(திரைக்கதை அல்ல)

"இன்னிக்குத் தபாலிலே ஏதாவது கடுதாசி வந்ததா?"

"நாலைந்து வந்திருக்கு! உபயோகப்படறதாக ஒண்ணும் தெரியலே!"

"ஏன்? மாவு சலிக்க, உலர்த்த உபயோகப் படறாப்போலே ஏதும் பத்திரிகை வரலியோ?"

"ஹூம், எல்லாம் புக் போஸ்ட் கவர்கள்!... கல்யாணக் கடுதாசுகள் போலே இருக்கு."

"அவனவன் எவ்வளவோ சிரமப்பட்டுக் கடனை உடனை வாங்கிக் கல்யாணம் நடத்துகிறான். உனக்கு அது இவ்வளவு அலட்சியமாகப் படுகிறதோ?"

"பேஷாய் நடத்தட்டும்! யார் வேண்டாம் என்று குறுக்கே போய் நிற்கிறார்கள்! ஆனால் ஏன் இந்த அழைப்புக்களை அனுப்பி வைக்கிறார்கள் என்று கேட்கிறேன். ஒவ்வொரு வீட்டுக்குப் போகும் போதும் ஏதாவது 'பிரசண்ட்' வாங்கிக் கொண்டு போகிறது யாருக்குக் கட்டுபடியாகிறது? இந்த சீசனிலே மாத்திரம் இதுவரையில் ஒன்பது கல்யாணத்துக்குப் போய்..."

"ஏய்! மறந்து போயிடாதே! நம் வீட்டுப் பெண்களுக்கும் கல்யாணம் நடக்கணும்! அழைப்புகளை அனுப்பாமல் இருந்து விடுவோமா? சொல்லு! உன்னைப்போல மற்றவர்களும் அலுத்துக் கொள்ள மாட்டார்கள்!"

"நன்றாகத்தான் இருக்கிறது நீங்கள் சொல்வது? ஏன் அப்படி அனுப்பாமல் இருக்கணும்? நாம் எத்தனை வீடுகளுக்குக் கொண்டு போய்க் கொடுத்திருக்கிறோம்? அவர்களெல்லாம் நமக்குத் திருப்பிச் செய்ய வேண்டாமா என்ன?"

"ஓஹோ! அப்படியா விஷயம்? அந்தக் கல்யாணக் கடிதாசிகளையெல்லாம் இப்படி எடு! நமக்குத் திருப்பிப் பரிசளிக்க வருபவர்களின் எண்ணிக்கையை எவ்வளவு தூரம் உயர்த்தலாம் என்று பார்ப்போம்."



ஃ ஃ ஃ

மேலே குறிப்பிட்ட சம்பாஷணை சமீப காலத்தில் அடிக்கடி எனக்கும் என் மனைவிக்கும் இடையே நடப்பதுதான்! வார்த்தை அமைப்புகள் வேண்டுமானால் அவ்வப்போது மாறுமே தவிர கருத்தின் அடிப்படை மாறாது! அவளுடைய ஆட்சேபணைகளில் ஓரளவு உண்மை இருக்கிறது என்றுதான் பல சந்தர்ப்பங்களில் தோன்றும். ஆனாலும், நாலு பேர்கள் சேர்ந்த சமூகத்தில் நமக்கும் அந்தஸ்தும் கௌரவமும் வேண்டும் என்ற ஆசைக்கு அடிமையாகும் எண்ணம் அந்த உண்மையை மறைத்து விடுகிறது. கல்யாணம் நடத்துபவர்கள் கடன் உடன்பட்டுக் கஷ்டப்படுகிறார்களோ என்னவோ, மாதக் கடைசியில் நடக்கும் சில முகூர்த்தங்களுக்கான அன்பளிப்பின் அவசியத்துக்காக நாம் கடன்பட்டுத்தான் தீரவேண்டியிருக்கிறது.

"அந்த சரோஜாவுக்கு அடுத்த வாரம் கல்யாணமாம்! ரொம்ப 'சீப்'பாக முடிச்சுட்டா!" என்று என் பெண் வியவகாரத்தைத் தொடங்கி வைப்பாள்.

நான்பாட்டுக்கு இதைக் காதில் போட்டுக் கொள்ளாத



வன் மாதிரி இருக்கக்கூடாதோ? "எந்த சரோஜா?" என்று அர்த்தமில்லாமல் கேட்டு வைப்பேன்.

"அதுதான்! அந்தக் காமாட்சி அம்மாள் இல்லே! நாம் அந்தத் தெருவிலே இருந்த போது பக்கத்து வீட்டிலே குடியிருந்தாளே! புது நிறமாய்...குண்டாய்...அவள் பெண்!" என்று வர்ணிப்பாள் என் மனைவி.

"நடக்கட்டும்! நடக்கட்டும்!" என்று நான் அலட்சியமாக இருக்க முயற்சி செய்வேன்.

"மெனக்கெட்டு அந்தக் காமாட்சியம்மாளே வந்து கூப்பிட்டுவிட்டுப் பத்திரிகை கொடுத்து விட்டுப் போயிருக்கிறாள்! முகூர்த்தத்துக்குப் போய்த் தலையை நீட்டணும்! போகலேன்னு வறட்டுக் கௌரவம் பிடிச்சவான்னு பொல்லாப்பு வேறு வரும்" என்பாள் என் மனைவி.

"சரி, சரி! இந்தத் தெருவிலேதானே!.... போயிட்டு வா?"

"வெறுங் கையாய்ப் போய் நிற்க முடியுமா.....? ஏன் மீனு! ஒரு சில்க் ரவிக்கைத் துண்டு வாங்கித் தர்றியா? உனக்குத்தான் பார்த்து வாங்கத் தெரியும்."

"போம்மா! ரவிக்கைத் துண்டு என்னத்துக்காம்? எனக்கே இரண்டு சோளி பீஸ் வாங்கணும்னு இரண்டு மாசமாச் சொல்லிண்டிருக்கேன். நடக்கலே! ரவிக்கைத் துணி சும்மா வரதோ? முக்கால் மீட்டர்னாலும் ஏழெட்டு ரூபாய்க்குக் குறையாது."

"அப்படீன்னா சின்னதா ஐந்நூறு ரூபாயிலே ஒரு எவர்சில்வர் பிளேட் வாங்கி......"

"இரண்டு மூன்று ரூபாய்க்கு ஒரு சுவாமி படத்தை வாங்கிக் கொடுத்துவிட்டுப் போங்களேன்" என்று நான் குறுக்கே உளறி வைப்பேன்.

"அந்தப் பொண்ணுக்குக் கல்யாணம்! சஷ்டியப்த பூர்த்தி இல்லே படம் கொடுக்க" என்று பழி வாங்குவாள் என் மனைவி.

"சரி, சரி! இந்தக் குழப்பத்தைப் பார்க்கிற போது, பேசாமல் ஒரு வாழ்த்துத் தந்தி கொடுத்துட்டுக் கம்னு இருங்கோ! பெருமையாக இருக்கும்" என்பேன் நான்.

"நன்றாகத்தான் இருக்கு! அப்புறம் நம்ம பெண்கள் கல்யாணத்துக்குத் தந்தி 'மெசஞ்சர்'தான் வருவான்! வேறே மனுஷா வர மாட்டா! ஆபீசுக்குக் கிளம்பற போது நினைவா பத்து ரூபா வைச்சுட்டுப் போங்கோ. பிரசண்ட் ஒன்றும் அமையலேன்னா பத்து ரூபாயை அந்தப் பெண் கையிலே கொடுத்துடறேன்! அதுக்குக் குறைஞ்சு நாம் கொடுக்கக் கூடாது. நம்மைப் பற்றிப் பெரிசா நினைச்சுண்டிருக்கா" என்று முத்தாய்ப்பு வைப்பாள் சகதர்மிணி.

கையிலிருந்தால் பத்து ரூபாயை எடுத்துக் கொடுப்பேன். இல்லாத போனால் எங்காவது கைமாற்று வாங்கிக் கொடுப்பேன். இப்படியே சுற்று வட்டாரத்தில் எத்தனையோ சரோஜாக்களின் கல்யாணங்கள் நடந்தேறியிருக்கின்றன; நடந்து கொண்டிருக்கின்றன! அவ்வப்போது இப்படித்தான் சந்தாக் கட்டிக் கட்டி நம் கௌரவத்தைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

காரியாலயங்களில் மேலதிகாரிகளைக் கண்டு அஞ்சுவதற்குப் பல மடங்கு அதிகமாகக் கல்யாண சீசன்களில் கல்யாணப் பரிசளிப்பு நிதி வசூல் லிஸ்டைத் தாங்கி வருபவர்களைக் கண்டு அஞ்ச வேண்டியிருக்கிறது.

"சார்! நம்ப மருதாசலத்துக்கு அடுத்த வாரம் மாரியேஜ்! உங்க மேஜையிலே நேற்றே இன்விடேஷன் வச்சுட்டேன்" என்று சொல்லிக் கொண்டே சக சிப்பந்தி ஒருவர் ஒரு சிறு அறிவிப்பையும் சில கையெழுத்துக்களையும் தாங்கிய கடுதாசியை நீட்டுவார்.

"எந்த மருதாசலம்? இன்விடேஷனிலிருந்து என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே!" என்பேன் அப்பாவித்தனமாக. முந்நூறு நானூறு பேர்கள் வேலை செய்யும் இடத்தில் இது சகஜம்தானே?

"போன வாரம் வேலையிலே சேர்ந்தானே, கிளாஸ் ஃபோர் (கடைநிலை ஊழியர்) மருதாசலம்! அவனுக்குத்தான்! தங்கமான பையன்" என்று வாழ்நாள் முழுவதையும் பொற்கொல்லர் பட்டறையிலேயே கழித்தது போல் சர்டிபிகேட் கலந்த பதிலை அளிப்பார் அந்த லிஸ்டு தாங்கி.

'இந்த ஆபீசிலே வேலை கிடைத்தால் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன் என்று பிரார்த்தனை செய்து கொண்டானா? அல்லது இந்தக் காரியாலயத்தில் நுழைந்தால் வியாழ நோக்கம் ஏற்பட்டுக் கல்யாணம் ஆகும் என்று ஜோசியர் சொன்னாரா?' என்று கேட்க நாக்குத் துடிக்கும். ஆனால் அந்த அருமையான நகைச்சுவையை லிஸ்டு தாங்கி அன்பர் புரிந்து கொள்ள மாட்டாரே என்ற பயத்தில், "அப்படியா? நான் இன்னும் பார்க்கலே, அவனை!" என்று நாசூக்காகச் சொல்லிப் பட்டியலில் இடம் பெறாமல் இருக்க வேண்டாமல் வேண்டுவேன்.

லிஸ்டு தாங்கி எமகாதகர். "அப்புறம் நானே அவனிடம் உங்களை வந்து பார்க்கச் சொல்றேன்! நீங்க இதிலே முதல் கையெழுத்துப் போடுங்க" என்று விஷயத்தின் குரல் வளையில் கையை வைப்பார்.

"என்னப்பா தங்கராஜ்! ஆளை விடமாட்டேங்கிறியே! இப்படி விலைவாசி ஏறியிருக்கிற நாட்களிலே குடும்பம் நடத்தி அன்றாடத் தேவைக்கான கறிகாய்கள் வாங்கிப் போடுவதே கஷ்டமாக இருக்கே! நீ இப்படிக் கல்யாணச் சந்தா ஒரு ரூபாய் வசூலிக்க வந்தால், கல்யாணங்கிற வார்த்தையே கசப்பு வார்த்தையாயிடும் போலிருக்கே" என்று பொருளாதாரத்தில் இறங்குவேன்.

அவன் விடுவானா? அவனுக்கு ஒரு புது பாயிண்ட் அல்லவா கிடைக்கிறது? "கரெக்ட் சார்! தலைக்கு ஒரு ரூபாய் வசூல் செய்து மசண்டாக ஆபீஸ் கௌரவத்தைக் காப்பாற்ற ஒன்றும் வாங்கித் தர முடியாது தான்!.... அதனால் உங்களைப் போல் சீனியர் ஆட்கள் இரண்டு ரூபாய் போட்டால் தான் இந்த விலைவாசி உயர்வு நாட்களில் கட்டுப்படியாகும்" என்பான்.

அவசரம் அவசரமாக டிபனுக்கும் பஸ் சார்ஜுக்கும் வைத்திருக்கும் சில்லறையில் ஒரு ரூபாயை உருவாக்கி அந்த லிஸ்டில் பரபரவென்று கையெழுத்துப் போட்டுக் கொடுத்து அதன் மேல் அந்த ஒரு ரூபாயை

வைத்தால்தான் லிஸ்ட் தாங்கியிடமிருந்து தப்பமுடியும்! 'முதல் தேதி வாங்கிக்கொள்' என்றால் அது மூன்று ரூபாயில் வந்து நின்றாலும் நிற்கும்.

இப்படி எத்தனையோ மருதாசலங்கள், தணிகாசலங்கள், அருணசலங்கள் வருடம் முழுதும் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறார்கள். நாமும் லிஸ்டில் கையெழுத்துப் போட்டுப் பணம் கொடுத்துக் கொண்டு தான் இருக்கிறோம். அப்புறம் வேலை பார்க்கும் இடத்தில் நம் கௌரவம், அந்தஸ்து மரியாதை எல்லாம் என்ன ஆவது ?

இப்போதுதான் எதற்கெல்லாமோ திட்டங்களும் சட்டங்களும் கொண்டு வருகிறார்களே! இந்த 'மாரியேஜ் பிரசண்டேஷன்' விவகாரத்துக்கு ஏதாவது அப்படி உருவாக்கக் கூடாதோ ?

'கல்யாணப் பரிசு திட்டம்' என்று கொண்டு வந்து மூன்று கல்யாணங்களுக்குப் பரிசளித்த நபர்கள் அதற்குமேல் எந்தக் கல்யாணத்துக்கும் பரிசுகள் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தத்திலிருந்து விதிவிலக்கு அளிக்கப்படுவார்கள்' என்று சொல்லலாமே! அவர்களுக்கு எந்தக் கல்யாண வீட்டிலும் சங்கோசமில்லாமல் வெறுங் கையாக நுழைந்து கௌரவம் பெற, 'மூன்று பரிசுகள் ஏற்கனவே கொடுத்தவர்' என்ற அத்தாட்சிப் பத்திரம் கொடுத்து விடலாமே! எவ்வளவு சங்கடங்கள் இதனால் தீரும்? மாரியேஜ் பிரசண்டேஷன் கண்ட்ரோல் ஆர்டர் கொண்டு வந்து, புது மணத் தம்பதிகள் மூன்று பரிசுகளுக்கு மேல் ஏற்றுக் கொள்ளக் கூடாது. அதற்கு மேல் வரும் பரிசுகளை அது டயமெண்ட் நெக்லேசாக இருந்தாலும் சரி, தகர சோப் டப்பாவாக இருந்தாலும் சரி ஏற்றுக் கொள்வது இந்திய பீனல்கோடில் ஏதாவது ஒரு செக்ஷனின் கீழ் குற்றமெனக் கருதப்படும் என்று சொல்லலாமே !

காரியாலயங்களில் லிஸ்டு தூக்குபவர்களும் முதல் மூன்று பெயர்களுடன் நிற்க வேண்டும் என்ற ஷரத்தும் தேவையாகவே இருக்கும்! ''இந்தத் தடவை நரசிம்மன் அகப்பட்டான்! கூட கோபாலசாமியும் கோதண்டனும் அகப்பட்டார்கள். இப்போதைக்கு நாம் பயப்பட வேண்டியதில்லை'' என்று மற்றவர்கள், அடுத்த பயல் கல்யாணக் கடிதாசியை நீட்டுகிற வரை கவலையில்லாமல் இருக்கலாமே !

அனுபவ சாத்திரத்துக்குப் புறம்பாக எத்தனையோ திட்டங்களைப் பற்றியும் சட்டங்களைப் பற்றியும் யோசிக்கும் மகானுபாவர்கள் இப்படி அனுகூல சாத்தியமான சில விஷயங்களைப் பற்றியும் யோசிக்கக் கூடாதோ ? இதனாலே எத்தனை புது இலாகாக்கள் தோன்றும் ? எத்தனை பேருக்கு வேலை வாய்ப்புகள் ஏற்படும்?

---

# பூப்பந்தாட்ட மைதானத்தில் சுந்தர சோழர்!



சென்னை ராஜ்ய பூப்பந்தாட்டப் போட்டி ஜவர் ஆட்டம் செமிபைனல் எழும்பூர் நகர சபை மைதானத்தில் நடந்து கொண்டிருந்தது. சரித்திரக் கதாநாயகர் சுந்தர சோழர் பூப்பந்து ஆட்ட மைதானத்துக்கு விஜயம் செய்தார்! அவர் வந்து ஆசனத்தில்அமர்ந்ததும், ''யோவ்!கோட்டை மிதிக்காதே! நகரு!'' என்ற குரல் எழுந்தது.

''எனக்குரிய அரியாசனத்தில் காசு கொடுத்து அமர்ந்திருக்கேன், நீங்க எப்படி என்னைப் பின்வாங்கச் சொல்லலாம்?''

''பூப்பந்தாட்டம் நடக்க வேணுமா? நீங்க உட்கார்ந்திருக்கிற இடம் கோடுள்ள இடமாக இருக்கு! எல்லைப் பிரச்னையை எழுப்பாதேயும்! ஆட்டக்காரர்களான பஞ்ச பாண்டவர்களுக்கு உங்களால் தொல்லை விளையும்!''

சுந்தர சோழருக்கும் பஞ்ச பாண்டவர்களுக்கும் என்ன சம்பந்தம் என்கிறீர்களா? பூப்பந்தாட்டத்துக்குச் சுந்தர சோழர் வர முடியுமானால் சுந்தர சோழர் உள்ள இடத்துக்குப் பஞ்ச பாண்டவர்கள் ஏன் வரக்கூடாது?

''பஞ்ச பாண்டவர்களுக்காக ஐந்து சாண் நிலமானாலும் விட்டுக் கொடுப்பதா? நடக்காது!'' என்று சுந்தரசோழர் மார் தட்டினார்.

சுந்தரசோழரை 'கேரோ' செய்து அப்புறப்படுத்தி உட்கார்த்தி ஆட்டத்தைத் தொடங்கினர். எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள் இல்லையா? ஒரு பூப்பந்தாட்ட ரசிகர் செய்த கலாட்டா இப்படி விரிந்தது. எழுத்தாளர் சங்க மகாநாட்டிலே 'சரித்திரக் கதாநாயகன் பாட்மிண்டன் மைதானத்துக்குப் போனான் என்று எழுத முடியுமா?' என்றார் ஓர் எழுத்தாளர். இந்நாளைய மன்னரைப் பழங்காலத்து மன்னராக்கினால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பார்த்துப் பேனாவை ஓடவிட்டேன், அவ்வளவுதான்.

பூப்பந்தாட்ட மன்னர் ராஜகோபாலின் மகன் பிச்சையும் கோதண்டமும் கரீமுக்கும் ஷெரீபுக்கும் எதிராக இரட்டையர் இறுதி ஆட்டத்தில் ஆடினர். கடைசியில் கரீமும் ஷெரீபும் இரட்டையர் கோப்பையைப் பெற்றார்கள். ஜவர் ஆட்டத்தில் இந்தியா சிமிண்ட் கோஷ்டி கோப்பையைப் பெற்றது. 'பூப்பந்தாட்டம் பெண்கள் விளையாட்டு' என்று முன்காலத்தில் சொல்லி வந்தனரல்லவா? பெண்களுக்கும் போட்டி வைத்து நந்தனம் பொழுதுபோக்குச் சங்கப் பெண்மணிகள் வெற்றி வாகை சூடினர். பூப்பந்தாட்டத்தில் பூவையர் ஆட்டம் பலரிடம் புன்னகையைப் பூக்கச் செய்தது என்பதைப் புகலவும் வேண்டுமோ?

—குண்டுமணி




**வசதியான வாழ்க்கைக்கு 32 நவீன மாதிரிகள்:** கடந்த பல வருஷங்களில் வீடுகளின் அமைப்பிலும் தோற்றத்திலும் முற்போக்கான பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. இன்றைய வீடுகள் நவீன வாழ்க்கைக்கேற்ற வசதிகள் பொருந்தி சுற்றுப்புறத் தோற்றத்தோடு இணைந்து சோபிக்கும் பாணிகளில் கட்டப்படுகின்றன. இந்தப் புத்தகத்தில் தரப்பட்டுள்ள மாதிரிகள் எல்லாமே புகழ்பெற்ற இந்திய கட்டடக் கலை நிபுணர்களால் புதுபுது பாணிகளில் பிளான் செய்யப்பட்டவை. எங்கானாலும் தம் தம் சக்திக்கேற்றபடி நவீன மாதிரிகளில் வீடு கட்ட விரும்புபவர்களுக்கு இந்தப் புத்தகம் மிகவும் உதவியாயிருக்கும்.

உங்கள் பிரதிக்கு இன்றே எழுதுங்கள்!

விலை ரூ. 5.00

ரெஜிஸ்டர்ட் தபால் செலவுக்கு ரூ. 1

**தி அஸோஸியேட்டெட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிட்டெட்**

**தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிட்டெட்**

இந்தக் கூப்பனைக் கத்தரித்து அனுப்பவும்

தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிட்டெட்
தன் பில்டிங், 175/1, மவுண்ட் ரோட், மதராஸ்

தயவு செய்து '32 designs for modern living' என்ற புத்தகத்தின் ஒரு பிரதியை எனக்கு அனுப்பிவைக்கவும். வி.பி.பி. யாக அனுப்பவும் ரூ. 6.00
ரூ. 6.00க்கு மணியார்டர் செய்த ரசீது இதுடன் வைத்துள்ளேன்.
(பொருத்தம் இல்லாத வாக்கியத்தை அடித்துவிடுங்கள்)

பெயர் ..............................
(பெரிய எழுத்துக்களில்)

விலாசம் .............................. K

..............................

CML.4976A

# சுவாங்சே குட்டிக் கதைகள்

## தொகுத்தவர் கு. அழகிரிசாமி

**சுவாங்சே என்ற சீன அறிஞர் கி. மு. 275ல் (சுமார் 2,250 ஆண்டுகளுக்கு முன்) காலமானவர். லாவோத்ஸே என்ற பிரபல சீன ஞானியின் தத்துவக் கொள்கைகளுக்கு வியாக்கியானம் எழுதும்போது ஆங்காங்கே விளக்கத்துக்காகக் கீழ்க்காணும் குட்டிக் கதைகளைக் கூறியிருக்கிறார். ஆழ்ந்த பொருள் கொண்ட இந்தக் கதைகளுள் சிலவற்றில் கதாசிரியரான சுவாங்சேயே ஒரு கதாபாத்திரமாக வருகிறார்.**

### காற்றும் பாம்பும்

காற்றைப் பார்த்துப் பாம்பு பின்வருமாறு கேட்டது: ''நான் என் முதுகெலும்பின் பலத்தினால் ஊர்ந்து செல்கிறேன். எனக்குக் கால்கள் இல்லாவிட்டாலும், காலுக்குப் பதில் ஏதாவது ஒன்று இருக்கிறது. உனக்கோ உடம்புகூட இல்லை. ஆனாலும் நீ வடகடலிலிருந்து தென்கடலுக்குஓடிக்கொண்டிருக்கிறாய். அது எப்படி உனக்குச் சாத்தியமாகிறது?''



காற்று சொன்ன பதில்: ''நான் வடகடலிலிருந்து தென்கடலை நோக்கி ஓடுவது உண்மைதான். ஆனால், யாராவது என்னை விரலால் குத்தினாலும், காலால் மிதித்தாலும் நான் அவர்களிடம் தோற்றுவிடுவேன். என்னால் பெரிய பெரிய மரங்களையும், பெரிய பெரிய வீடுகளையும்தான் சாய்க்க முடியும். பற்பல சிறு தோல்விகளிலிருந்து நான் பெரிய வெற்றியைச் சம்பாதிக்கிறேன்.''

### பாரபட்சம் ஏன் ?

சுவாங்சே (இந்தக் குட்டிக் கதைகளின் ஆசிரியர்) இறக்கும் தருணம். அவர் இறந்தபின் சடலத்தை மிகவும் விமரிசையாக அடக்கம் செய்ய வேண்டும் என்று அவருடைய சீடர்கள் விரும்பினார்கள்.

சுவாங்சே சொன்னார்: ''மண்ணுலகும் விண்ணுலகும் எனக்குச் சவப் பெட்டிகள் என்று நான் கருதுகிறேன். ஒன்று உள் பெட்டி; மற்றொன்று வெளிப் பெட்டி. சூரிய சந்திரர்களை எனக்குப் பரிசாகக் கொடுக்கப்பட்ட இரண்டு வைரங்கள் என்றும் நட்சத்திரங்களை என் சவப்பெட்டியில் பதித்த ரத்தினங்கள் என்றும் நான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். என் சவ அடக்கத்துக்குப் பிரபஞ்சத்தின் சகல சிருஷ்டிகளுமே வந்து சேரும். இதைவிட விமரிசையான முறையில் என் சடலத்தை அடக்கம் செய்வதை நான் விரும்பவில்லை.''



''எங்களுடைய பயம் என்னவென்றால், குருநாதரின் சடலத்தைக் கழுகுகள் வந்து கொத்தித் தின்றுவிடக் கூடாதே என்பதுதான்'' என்றார்கள் சீடர்கள்.

''தரைக்கு மேலே போட்டால் என் சடலத்தைக் கழுகுகள் தின்றுவிடும்; தரைக்குக் கீழே புதைத்தால் கரையான்கள் தின்றுவிடும். ஒன்றினிடமிருந்து திருடி மற்றொன்றுக்குக் கொடுப்பானேன்? ஏன் பாரபட்சத்துடன் நீங்கள் கரையான்களுக்கு மட்டும் சலுகை காட்ட விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டார் சுவாங்சே.

### இணையற்ற புத்திமதி

வெய் என்பது ஒரு ராஜ்யம். அதைக் கைப்பற்றுவதற்காகக் கடும் போர்கள் செய்தான் ஹான் ராஜ்யத்தின் அரசன். ஆனால் முடியவில்லை. அவன் மிகவும் சோர்ந்து போய்க் கவலைப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் ஓர் அறிஞர் அவனிடம் போனார்.



''உன் கண் முன் ஒரு பட்டயம் தொங்குகிறது என்று வைத்துக் கொள்வோம். அதில், 'இதை உன் இடது கையால் எடுத்தால் உடனே உன் வலது கை கோணி வலிப்பினால் பீடிக்கப்படும். உன் வலது கையால் எடுத்தால் உடனே உன் இடது கை கோணி வலிப்பினால் பீடிக்கப்படும்' என்று எழுதியிருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். அந்தப் பட்டயத்தை எடுத்துக் கொள்வதன் மூலம் இந்த உலகத்தையே உன் ஆட்சியின் கீழ் கொண்டு வர முடியுமென்றாலும் அதை நீ எடுப்பாயோ?'' என்று கேட்டார் அறிஞர்.

''மாட்டேன்'' என்றான் அரசன்.

''நல்லது. இதிலிருந்து உன் இரண்டு கைகள் உலகத்தைவிடவும் முக்கியமானவை என்பது தெரிகிறது. அப்படியானால் உன் உடம்பு கைகளைவிட முக்கியமானது. அதே சமயம் உன் ஹான் ராஜ்யமோ உலகத்தை

விட எவ்வளவோ சிறியதாக இருக்கிறது. இதைவிடவும் சிறியதாக இருக்கும் வெய் ராஜ்யத்தை அடைவதற்காகத்தான் நீ போர் செய்கிறாய். அந்தச் சிறு பிரதேசத்தை அடைய முடிய வில்லையே என்பதற்காக நீ உன்னையே வருத்திக் கொண்டு துயரத்தில் மூழ்கியிருக்கிறாய்'' என்றார் அறிஞர்.

இதைக் கேட்ட ஹான் ராஜ்ய மன்னன், ''அபாரம்! எனக்கு எத்தனையோ ஆலோசகர்கள் இருந்தும் இப்படிப்பட்ட புத்திமதியை யாருமே சொல்ல வில்லை'' என்று கூறினான்.

## வெகுமதி வேண்டாம்!

சாவோ என்ற அரசன் நாட்டைவிட்டு ஓடியபோது யூவே என்னும் கசாப்புக் கடைக்காரனும் ஓடினான். அரசன் நாட்டுக்குத் திரும்பியபோது யூவேயும் திரும்பிவிட்டான். தான் நாட்டை விட்டு ஓடியபோது தன்னைப் பின்தொடர்ந்து ஓடியவர்களுக் கெல்லாம்



அரசன் வெகுமதி வழங்கினான். கசாப்புக் கடைக்கார யூவேக்கு அதிகாரிகள் வெகுமதி அளிக்கப் போனபோது அவன், ''மகாராஜா தம் ராஜ்யத்தை இழந்தபோது நான் கசாப்புக்கடை வியாபாரத்தையும் இழந்துவிட்டேன். மகாராஜாவுக்குப் பழையபடியும் ராஜ்யம் கிடைத்தபோது, நானும் பழையபடி கசாப்புக் கடைக்காரனாகி விட்டேன். நான் இழந்ததைத் திரும்பவும் பெற்றுக் கொண்டேன். ஆகவே, எனக்கு வெகுமதி எதுவும் தேவையில்லை'' என்று சொன்னான்.

அதிகாரிகள் வெகுமதியை வாங்கிக் கொள்ளும்படி அவனை வற்புறுத்தினர். அப்போது கசாப்புக் கடைக்காரன் சொன்னான் : ''மகாராஜா தம் ராஜ்யத்தை இழந்ததற்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அதனால் நான் தண்டனை எதுவும் அடையத் தேவையில்லை. இப்போது மகாராஜா தம் ராஜ்யத்தைப் பழையபடியும் அடைந்ததற்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. அதனால் நான் வெகுமதி எதுவும் அடையத் தேவையில்லை.''

இவ்விஷயமறிந்த அரசன் கசாப்புக் கடைக்காரனைத் தன் எதிரே அழைத்துவரச் சொன்னான். அவன் வர மறுத்து, பின் கண்டவாறு சொல்லியனுப்பினான்: ''அரசாங்கச் சட்டப்படி ராஜ்யத்துக்கு மகத்தான சேவை செய்த ஒருவனுக்குத்தான் அரசரைப் பார்க்க உரிமை உண்டு. எனக்கோ ராஜ்யத்தை வைத்துக் காக்கும் ஞானமும் கிடையாது; அதன் பாதுகாப்புக்காகப் போராடிச் சாகும் தைரியமும் கிடையாது. அந்நிய நாட்டுப் படை தலைநகரில் நுழைந்தபோது நான் பயந்தடித்துக் கொண்டு ஓட்டம் பிடித்தேன். நான் அரசரைப் பின்தொடர்ந்து ஓட வேண்டும் என்ற நோக்கத்துடன் ஓடியவனல்ல. மகாராஜா இப்பொழுது நேசச் சட்டத்துக்கு விதிவிலக்காக என்னைப் பார்க்க வேண்டும் என்று கூறுகிறார். இது செய்யத் தக்க நியாயமான காரியமாக எனக்குத் தோன்றவில்லை.''

## சாரமும் சக்கையும்

ஓர் அரசன் அரண்மனையின் முன்கூடத்தில் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தான். அரண்மனையின் முற்றத்தில் ஒரு தச்சன் வண்டிச் சக்கரம் செய்து கொண்டிருந்தான். அவன் உளியைக் கீழே வைத்துவிட்டு அரண்மனைக்குள் சென்று அரசனைப் பார்த்துப் பின் வருமாறு கேட்டான்.

''மகாராஜா அவர்கள் என்ன படித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நான் கேட்கலாமா ?''

''ஞானிகள் எழுதி வைத்திருப்பவற்றைப் படித்துக்கொண்டிருக்கிறேன்'' என்று பதில் சொன்னான் அரசன்.

''அந்த ஞானிகள் இப்போது உயிரோடு இருக்கிறார்களா ?''

''அவர்கள் இறந்து போய் எவ்வளவோ காலமாகி விட்டது.''

''அப்படியானால் அந்தப் பழைய மனிதர்கள் வைத்து விட்டுப் போன சக்கையைத்தான் தாங்கள் வாசித்துக் கொண்டிருக்கிறீர்கள்.''

''புத்தகங்களைப் பற்றித் தச்சனுக்கு என்ன தெரியும்? நீ ஏன் இவ்வாறு கூறுகிறாய் என்று சொல். நீ சொல்லும் காரணம் ஒப்புக்கொள்ளத்தக்கதாக இருந்தால் உன்னை இப்படியே விட்டு விடுகிறேன்; இல்லையென்றால் உனக்கு மரண தண்டனை விதிப்பேன்'' என்று சொன்னான் அரசன்.

தச்சன் கூறிய பதில்: ''என் தொழில் முறையை ஒட்டியே ஓர் உதாரணம் காட்டுகிறேன். நான் வண்டிச் சக்கரத்துக்கு ஆரக்கால் செய்கிறேன். இறுக்கமாக இருக்கும்படி செய்துவிட்டால் அது சக்கரத்தில் பொருந்தாது. தொளதொளப்பாக இருக்கும்படி செய்து விட்டால் அது சக்கரத்தைப் பற்றிக் கொண்டு இருக்காது. அதை நன்கு பொருந்தக் கூடிய முறையில் செய்ய வேண்டும். கைகளால் ஆரக்கால் கட்டைகளைத் தடவிப் பார்த்து, மனதுக்குள்ளேயே நிதானித்து,



ர்கரத்தில் பொருந்தும்படியாக அவற்றை நான் செய்துவிடுவேன். அப்படி நிதானிக்கும் உணர்ச்சி ஒரு சூட்சுமமாக இருக்கிறது. அந்த உணர்ச்சியை வார்த்தைகளால் எடுத்துக் கூறவோ, என் மகனுக்குக் கற்பிக்கவோ, அல்லது என் மகன் என்னிடம் அதைக் கற்றுக் கொள்ளவோ முடியாது. எனக்கு வயது எழுபது ஆகிறது. இந்த வயதிலும் அந்த உணர்ச்சியின் உதவியாலேயே சக்கரங்கள் செய்து வருகிறேன். பழங் காலத்தவர்கள் எப்போதோ இறந்து போய் விட்டார்கள். அவர்களால் எந்த விஷயத்தைப் பிறருக்குப் புகட்டச் சாத்தியப்பட்டிருக்குமோ அந்த விஷயமும் அவர்களோடு இறந்து போய் விட்டது. அதனால் தான் மகாராஜா வாசிப்பது, பழங் காலத்தவர்கள் வைத்துவிட்டுப் போன சக்கையைத் தான் என்று சொன்னேன்.''

## அழகியும் குரூபியும்

ஒருவன் வெளியூருக்குப் போயிருந்தான். அங்கே ஒரு சாப்பாட்டுக் கடைக்குச் சென்றான். கடையில் இரண்டு பெண்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். ஒருத்தி மிகவும் அழகாக இருந்தாள்; மற்றொருத்தி மிகவும் விகாரமாக இருந்தாள். விகாரமாக இருந்தவள் அந்தக் கடையில் உயர்ந்த ஸ்தானத்தை வகித்து வந்தாள். அழகாக இருந்தவள் கடையைப் பெருக்குவதும், மெழுகுவதுமாக இருந்தாள். இதைப் பார்த்த அவன், அந்த



இருவருக்கும் இவ்விதமான அந்தஸ்துகள் கொடுக்கப்பட்டிருப்பதன் காரணத்தைக் கேட்டான். கடைக்காரப் பையன் பின் வருமாறு பதில் சொன்னான்:

''அழகாக இருப்பவள் 'நான் அழகாக இருக்கிறேன்' என்ற நினைப்புடன் இருக்கிறாள். அதனால் நாங்கள் அவளை அழகி என்று நினைக்கவில்லை. விகாரமாக இருப்பவள், 'நான் விகாரமாக இருக்கிறேன்' என்ற நினைப்புடன் இருக்கிறாள். அதனால் அவளை விகாரமானவள் என்று நாங்கள் நினைக்கவில்லை.''

---




**அருள்மொழி:** 'யாம் பெற்ற துன்பம் தவிர்க்க இவ்வையகம்'

**அறிவுரை:** 'தேள் இருக்குமிடம் தேடிச் செல்லாதீர் — தேவைப் படும்போது அது தானே வந்து உதவும்'

**தேள்கடி மருந்து:** தேள் கடிக்கிறதில்லை; கொட்டுவது தான் உண்டு. அப்படித் தேள் வாயால் கடிக்கத் தொடங்கினால் பாம்பு வாலால் கொட்டத் தொடங்கும்! போகட்டும். எதற்கும் நான் சொல்கிற சிகிச்சை முறைகளைப் பின்பற்றுங்கள்.

கைவிரலிலோ, கால் விரலிலோ தேள் கொட்டினால் அந்தப் பாகத்துக்குமேல் இறுகக் கட்டுங்கள். முதுகில் கொட்டினால், முகத்தில் கொட்டினால் என்ன செய்வது என்று தயவு செய்து கேட்காதீர்கள்!

எளிய மருந்து சொல்கிறேன்— உடலின் எந்தப் பகுதியில் தேள் கொட்டினாலும் நேரடியாக எதிர்த் தரப்புக் காதினுள் நசுக்கிய வெங்காயத்தின் (உப்புக் கலந்ததுதான்) சாற்றைச் சொட்ட விடுங்கள். உப்புக் கலந்த வெந்நீரால் கொட்டுவாய்ப் பகுதியில் அமுக்கி ஒத்தடம் கொடுங்கள்.



இந்த வைத்தியம் பலிக்குமா என்று பரீட்சித்துப் பார்க்க விரும்பினால் அதற்கு முதல் தேவை என்ன தெரியுமா? சந்தேகமென்ன? தேள்தான்!

**தேள்கடி ஆராய்ச்சி:** தேள் எப்போதுமே நம்மைவிட மிகவும் பயந்த சுபாவமுள்ள ஜந்துதான். அதன் கொடுக்கில் ஜலைவிடக் குளிர்ந்த திரவம் சேமித்து வைக்கப்பட்டிருக்கிறது. இதை யாருக்காவது இன்ஜக்ஷன் செய்யும் நல்ல சமூகப் பணிக்காகவே தேள் உயிர் வாழ்ந்து வருகிறது. தேள் கொட்டும்போது குளிர்ச்சி தாங்காமல் நமக்குச் 'சுரீர்' உணர்ச்சி ஏற்படுகிறது. நாம் உடனே துடிக்கிறோம். இன்ஜெக்ஷன் செய்த பிறகு ஊசியை நம்மிடமே விட்டு விட்டுத் தேள் ஓடிப் போய்விடுகிறது. அந்த நிலையில் அது கொட்ட முடியாது. ஸ்டாக் தீர்ந்த சர்க்கரை வியாபாரிபோல் அது பதுங்கி விடுகிறது.

**கதை:** தேளொன்று கங்கையில் மிதந்து வந்ததாம். அங்கே ஸ்நானம் செய்யச் சென்றிருந்த முனிவர் ஒருவர் அதைப் பிடித்துக் கரையில் விட முயன்றாராம். பிடித்த உடனே அவர் கையில் போட்டதாம் ஒரு போடு. கையை அவர் உதறியதால் அது மீண்டும் தண்ணீரில் விழுந்ததாம் — மீண்டும் இரக்கப்பட்டு அவர் மேலே எடுத்து விட்டாராம். மறுபடியும் கொட்டியதாம்! 'ஒரு தடவைதானே தேள் கொட்ட முடியும் ?' என்று கேட்கா தீர்கள்? ஒரு நல்ல கருத்தைச் சொல்ல வந்த கதைத் தேளல்லவா அது? 'தன் இயற்கைப்படி தேள் மீள மீளக் கொட்டுகிறதெனில், மனித இயற்கைப்படி அதை நான் மீள மீளத் தண்ணீரிலிருந்து எடுத்துக் காக்கத்தானே வேண்டும் ?' என்று முனிவரைப் பேச வைத்த தேள் அல்லவா அது ?

— பரதேசி




- வெள்ளி விழா
- இரண்டாவது
- பரிசு
- நாவல்



"கல்லுக்குள் ஈரம்" எழுதிவரும் ஆசிரியர் ர. சு. நல்லபெருமாள் அவர்கள், சுதந்திரப் போராட்டம் பற்றிச் சரியாகத் தெரியாதிருக்கும் என்போன்றவர்களுக்கு எவ்வளவு அழகாகவும் இனிமையாகவும் கதை மூலம் அவ்வரலாற்றைத் தெரியப்படுத்துகிறார்! எப்போது கல்கி வரும் என்று ஏங்கும்படி செய்து விட்டாரே!

கொழும்பு-11 கே. அப்துல் ரஹுபு



திரிவேணியின் ஒரே எண்ணம் ரங்கமணி மகாத்மாவைச் சந்திக்க வேண்டும் என்பது தான். கடைசி நேரத்தில் அதையே வாக்குறுதியாக அவனிடமிருந்து பெற்றுக் கொண்டு அவள் மன ஆறுதலுடன் இறந்து விட்டாள்.

கல்கி வாசகர்களைத் தேற்றுவது யார்? கங்கை, யமுனை, சரஸ்வதி மூன்றும் சேர்வது தான் திரிவேணி என்பது.

அதைப் போன்று நாவன்மை, வீரம், அன்பு மூன்றும் சேர்ந்த பிறவிதான் திரிவேணி என்பது.

திரிவேணி இறந்து விட்டாலும் அவளுடைய குணங்களாவது மக்களுக்குக் கிடைக்க இறைவன் அருள் புரிவாராக!

மதுரை என். கிருஷ்ணமூர்த்தி



சாதாரணமாக மனிதனின் இருதயம் எழுபத்திரண்டு முறைகள்தான் துடிக்கும். ஆனால் கல்லுக்குள் ஈரம் தொடர்கதையைப் படிக்கும்பொழுது 216 முறைகள் துடிக்க வைக்கிறது, ர. சு. நல்லபெருமாளின் வசன நடை! என் போன்ற இளைஞர்கள் மனத்தில் விடுதலைப் போராட்டத்தில் ரங்கமணி போல் பங்குபெற முடியவில்லையே என்ற ஏக்கம் உண்டாகிறது.

கொல்லம் நா. ஆரா அமுதன்



வியாபார நோக்கமின்றி மக்கள் குலம் நல் வாழ்வு காண விழைந்து அளவற்ற தொண்டு புரிந்து வருகிறது 'கல்கி'. 'கல்கி' இதழ் கையில் வைத்திருப்பவர்களைக் கண்டால், மற்றவர்கள் ஒரு மதிப்புக் கலந்த உணர்வோடுதான் அவர்களைப்பார்க்கிறார்கள்.

இந்தச் சேவையின் ஓர் அங்கமாக 'காமகோடி'யின் கருணை மொழியை வெளியிட்டு வருகிறீர்கள். இதைவிட உயர்வாக மக்கள் குலத்துக்குச் சேவை செய்ய முடியாது என்பதைவிட வேறெதுவும் சொல்லத் தோன்றவில்லை. அமுதத்தை யாராவது இனிப்பாக இருக்கிறது என்றும், ஒளியை யாராவது வெளிச்சமாக இருக்கிறது என்றும் கூறுவது எவ்வளவு அவசியமல்லவோ, அப்படித்தான் காமகோடியின் கருணை மொழியைப் பற்றிப் பாராட்டிக் கூறுவதும்.

பல்லாவரம் இரா. பாலாஜி

---


Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

உங்கள் கேசத்தை ஆரோக்கியமுடன் பளபளப்பாக வைத்திருப்பது

# பிரில்க்ரீம்.

எண்ணெய்ப்
பற்றா
கலைசலோ
இராது

## பிரில்க்ரீம் மட்டுமே

* அதிக எண்ணெப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் சேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
* மிகவும் சிக்கனமானது-ஒருமுறை தடவி வாரிக் கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
* உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக் கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.

இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்!

கருமையோடு பளபளக்கும் ஆரோக்கியமான கேசத்திற்கே!




B-1-P-1-67-TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி




வெளுக்கும் துணிகளெல்லாம் வெண்மை மயம், துப்புரவான தூய்மை மயம்: வெல்வது ஸர்ப் சலவையின் எல்லைமீறிய வல்லமை! கரைகடந்த நுரைவளம்! கேட்பானேன். சேலை, சிற்றுடை முதல் சிறுவரின் ஆடைவரை ... எதற்கும் நிகரிலாத வெண்மை, சிகரமான தூய்மை! கைப்பட வீட்டிலே துணி வெளுக்க ஒரே வழி: கைகண்ட ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

SU. 38-140 TM